உ

சிவமயம்.

கணபதிதுணை.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.

---

# திருவருட்பிரகாசனார் சந்நிதிமுறைப்
# பிரபந்தங்கள்.

இவை

ஷை சுவாமிகள் சிரேஷ்ட மாணாக்கரும்

சமரசவேத சன்மார்க்க சங்கவித்வான்களி லொருவரும

சென்னை பிரசிடென்ஸி காலேஜில்

தமிழ்ப்புலமை நடாத்தியவரு மாகிய

உபயகலாநிதிப் பெரும்புலவர்

தொழுவூர்

## வேலாயுதமுதலியா ரவர்களால்

தோத்தரிக்கப்பட்டு,

ஷை முதலியாரவர்கள் மூத்தகுமாரர்

தொழுவூர் வே-திருநாகேசுவரமுதலியார்

திரட்டித்தர,

ஷை முதலியாரவர்கள் இளையகுமாரர்

தொழுவூர் வே செங்கல்வராயமுதலியாரால்,

---

சென்னை:

ஜீவகாருண்யவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1912.

Registerd Copy right.

# பொருளடக்கம்.

| எண் | விடயம். | பக்கம். |
|---|---|---|
| 

## நூல்.

உ

சிவமயம்.

கணபதி துணை.

# இந்நூலாசிரியரியற்றிய நூல்கள்.

## வசன நடை.

பராசரஸ்மிருதி-ஆசாரகாண்டம்
சங்காவிஜய வசனம்
ஸ்ரீ மார்க்கண்டேயபுராண வசனம்
பெரியபுராண வசனம்
வேளாண்மரபியல்.
திருவெண்காட்டடிகள்சரித்திரவசனம்
யோகவித்தை யுபந்நியாசம்
விநாயகசதுர்த்தி விரதசங்கிரகம்
போஜராஜ சரித்திரவசனம்
மகாவீர சரித்திர நாடகம்.

## செய்யுள் நடை.

### மூத்த பிள்ளையார்.

துவாதசநாம சங்கீர்த்தனம்
திருப்பாதப்புகழ்ச்சிமாலை
சரணதசகம்
மங்களம்
பஞ்சரத்தினம்

### இளைய பிள்ளையார்.

ஷண்முகசரணுஷ்டகம்
திருப்பதத்திருப்புகழ்மாலை
திருக்கழற்பல்லாண்டுமாலை
சித்திரயமகவந்தாதி
திருத்தணிகைச்சித்திரமாலை
,, பதிற்றுப்பத்தந்தாதி
,, வெண்பாவந்தாதி
திருத்தணிகைநான்மணிமாலை
,, மும்மணிக்கோவை
,, இரட்டைமணிமாலை
,, கலம்பகம்
திருப்போரூர்கலிவிண்ணப்பம்
தனிப்பதிகங்கள்

### சிவபெருமான்.

சிவாட்டோத்தரசதநாமமஞ்சரி
ஸ்ரீபாதத்திருப்புகழ்மாலை
திருவடித்திருப்புகழ்மாலை
திருப்பதியமுகாயிரத்தந்தாதி
அடைக்கலமாலை
அபயமாலை
சிறுவிண்ணப்பமாலை
சரணுகதிமாலை
அம்பலக்குறம் (அமுதப்பாட்டு)
கையடைமாலை
சந்நிதிமுறையிட்டுமாலை
ஓலமாலை
தைநியசரணியமாலை
கையறவுமாலை
அபராதக்ஷமிப்புமாலை
அருணுமபாராயணத்திரட்டு
மகிழ்மாக்கலம்பகம்

வடிவுடையம்மன் சௌந்திரியாஷ்டகம்

### திருவருட்பிரகாசனார் சந்நிதிமுறை.

ஆளுடைபிள்ளையார்
இரட்டைமணிமாலை
தசகமாலை
ஆளுடையநம்பிகள்
கலிவிண்ணப்பம்

சிவஞானபாலையதேசிகர் மும்மணிக்கோவை.

நெஞ்சாற்றுப்படை.

ஸ்ரீ தாதகுருநாதர் கலிமாலை.

ஆசுகவித் திரட்டு.

சிவமயம்.

கணபதி துணை.

# பதிப்புரை.



ஒப்புமுயர்வு மில்லாப் பேரின்ப வீட்டை, அடையும் பொருட்டு தாத மார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்க மென்னும் நான்கு வகையில் பெருங்கருணைத் தடங்கடலாகிய பரசிவப் பிரபுவை வழிபட்டுய்ந் தார் பலபெரியர். அவ்வழிபாடு தாத்திற்கேற்றதாம். சிலர் "அன்பிற்பெருகிய சிறப்பின்மிக்க, அர்ச்சனைபாட்டே யாகு மாதலான் மண்மேல் நம்மைச், சொற்றமிழ் பாடுக" என்று "திருவருட்டுறை" இறைவர் ஆளுடைய நம்பிக ளுக்கு கட்டளையிட்டவண்ணம் தோத்திரஞ் செய்துய்ந்தனர்.

இற்றைக்குச் சுமார் நாற்பத்தைந்து வருடங்களுக்குமுன் சென்னையில் சிவாநுபூதிச் செல்வராய்ச் சிவபெருமானைச் செந்தமிழ்ப்பாக்களாற் றுதித்த **"திருவருட்பிரகாச வள்ளலா"** ரென்னும் **"சிதம்பரம் - இராமலிங்கசுவா மிகள்** விளங்கி யிருந்தனர். அவரிடம் ஓரோர் விடயத்தை மாத்திரமறிந்த பல மாணாக்கரிருந்தனர். முற்று முணர்ந்தாரிலர். இந்நூலாசிரியர் மாணாக்கர் களில் சிரோரத்தினமாகியும், சுவாமிகளது பூரண கிருபையைப் பெற்றாரா யும், அறிதற்கரிய விடயங்களை யெல்லாம் சுவாமிகளிடத்தி லறிந்தாராகியும். விளங்கியவரிவரொருவரேயாம். "மகனறிவு தந்தையறிவு" என்று தம்மா சிரியராற் புகழப்பட்டவர். ஆசிரிய பத்தியிலும் வழிபாட்டிலும் முதிர்ந்து கனிந்து நெக்குருகிப் பலவருமைப் பாக்களா லவரைத் துதித்துப் பொறித்து வைத்தனர். என்கருதியோ வெளியிடாது விட்டனர்.

அடியேன் சுமாரையாட்டைப் பிராயத்தனும் வடலூரினின்றும் இவரு டன் சென்னை சேர்ந்தவன் பல்வகைய இடையூறு லத்திசைநோக்கவேலாது சென்ற குரோதிஞூப் தைப்பூச மகோச்சவத்தைத் தரிசிக்க வினைதுரப்ப ஷெ சுவாமிகள்மீது இவரியற்றிய **திருப்பள்ளியெழுச்சியில்** இரண்டு பாசு ரங்களையும், **மங்கல வாழ்த்தையும்** லகுலேசமாக வச்சிட்டுடன்கொண்டு சென்று, "மாதுக்க நீங்கலுருவீர் மனம்பற்றி வாழ்மின், சாதுக்கள் மிக்கீரி றையே வந்து சார்மின்களே" என்றதற்கிணங்க அங்குக் கூடியிருந்த சாதுக் களுக்கும் அக்காலத்தேயே சென்னையிலுள்ள சாதுக்களுக்கு எனது சகோத ரர் **தொழுவூர் - வே, செங்கல்வராய முதலியாரைக்** கொண்டும் வழங்க அவர்கள் இப்பாக்கள் முற்றும் பெற்றிலமென்று வற்புறுத்தக் கண்டேன், மேல் எந்தையாரது அபிமானிகள் பலர், முக்கியமாய் சென்னை, பிரஸி

டென்வசி காலேஜில் தமிழ்ப் பண்டிதராக விருக்கும், மகாமகோபாத்தியா யர், பிரம்மஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள், இப்பிரபந்தங்களை விரைவில் திரட்டி யோர் புத்தகமாக வெளியிடும்படி எவிக்கொண்டிருந்தனர். எந்தை யார் சுவாமிகள்பரமாக சதபங்கி இயற்றியதாகச் சொல்லியதுண்டு. அவரது சுவடிக் கட்டுகளில் காணப்பெற்றிலன். பிறகு, சித்தாந்தசரபம், ம-ா-ா-ஸ்ரீ பூவை - அஷ்டாவதானம்-கல்யாண சுந்தர முதலியாரவர்கள் அது தமக் குத் தெரிந்தோ ரிடத்திருந்து கைதப்பியதாக வருந்தி அதை மறுபடி சவத ரிக்க முயன்று வருகின்றனர். அந்நன்றி மறக்கற்பாலதன்று. கிடைத்ததும் வெளியிடப்படும்.

இவ்வருமைப்பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளிய எந்தையாரது சரித்திரச் சுருக்கமும், ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளது சரித்திரச் சுருக்க மும் பல இஷ்டர்கள் இப்புத்தகத்தி லிருக்கவேண்டுவ தவசிய மென்று வரி புறுத்த ஒருவாறு எழுதிச் சேர்க்கப்பட்டன. இவ்விரு சரித்திரங்களது விற் வும் பின்னர் வெளியிடப்படும். இன்னும் சுவாமிகள் சரித்திரத்திற்கான ஆத ரவுகள் சில முக்கியமாய் வேண்டி யிருப்பதால் தற்சமயம் சுருக்கமாக விடப் பட்டது.

இவ்வரிய பரமாசிரிய பணிவிடைக்கு நேர்ந்த இடையூறுகளும், மனத் தாங்கல்களும் சுவாமிகளே யறிவர். அவரது கிருபையாலேயே இஃதோர் வகையாகப் பூர்த்தியாயிற்று. அப் பரமாசிரியன் திருவடிகளை "ஆரியனார் சீர்பாதந்தாங்க வமைகிரமும், ஆரியனார் சீர்பாடவாராவும் - ஆரியனார் செம் மொழியே சிந்திக்கு நெஞ்சுந்தருந்தவமே, யெம்மையினும் வாழ்கவினிது" என்ற வெந்தையார் கட்டளைப்படி வணங்கி யுய்வோமாக. அலங்காரத்திற்கு உரையின்றி யமையாதாகலின்பின்னர்த் தனியாய் வெளிவரும்.

"வேலாயுத ஆச்சிரமம்,,
சிறுகடம் கிராமம்,
1912ஷ் ஜனவரி }

இப்படிக்கு,
அடியார்க் கடியன்,

தொழுவூர் வே - திருநாகேசுவரன்.

உ

சிவமயம்.

கணபதி துணை.

—(*)—

திருவருட்பிரகாச வள்ளலார்

என்னும்

# சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகள்

# சரித்திரச் சுருக்கம்.



## பீடிகை.

அநாதிமலமுத்தரான பரசிவப்பிரபு தனதருளிச்சைவழி, ஆன்மாக்களுய்யவேண்டி, படைத்தலுக்குப் பிரமனையும், காத்தற்குத் திருமாலையுஞ், சிருஷ்டித்து மேலெஞ்சிய சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்பனவற்றைத் தம்வசம் நிறுவி, தநுகரண புவன போகங்களைக் கொடுத்து அறக்கருணையாலும் மறக்கருணையாலும், முழுமுதற்கடவுளாய தம்மை வழிபட்டுய்ய வகுத்து, அதற்கான நிலவுலகப்பரப்பைப் பல்வேறு பாகங்களாகப் பகுத்ததிற் புண்ணியம் பலித்த பரதகண்டத்தை வகுக்க வருளினர். ஆன்மாக்களாவர் சகலர் பிரளயாகலர் விஞ்ஞானகலர் என்பராம். இவர்களுய்யுநெறி, தாதமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம் சன்மார்க்கமென நால்வகைத்தாம். இந்நெறியானே தேவர், மானிடர், புள், விலங்கு, ஊர்வன முதலிய வழிப்பட்டுய்ந்த கதைகள் பல சிவபுராணங்களுள் பரக்கக்காணற்பாலதாம். மானிடருள். நாற்குலத்தரும, பஞ்சம, அநுலோம, விராத்திய, பிரதிலோமமுதலியர் பலருளா. இவர்களில் தவமேனிதாங்கி [illegible]ணங்கருதி, வெளிவந்த ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய வரசுகள், ஆளுடைய நம்பிகள், ஆளுடைய அடிகள், பட்டினத்தடிகள், அதிராவடிகள், கபிலர், [illegible] தாயுமானார், சேரமான் முதலியர்வாசிக, மானசிக காயிகவழித் [illegible] செய்துய்ந்தனர். அவரைப் பின்பற்றி அந்தந்தகால தேசவர்த்தமான[illegible] இணங்கத் திருவருட்பாங்காயினோர் பலருள், சிவானுபூதிச்செல்வராய், [illegible] முத்தி வியக்தி உபாயங்களை விளக்கு மாசிரியராய், சமரசவேத சன்மார்க்கந் தலையெடுத்தோங்கவும், ஜீவகாருண்ணியம் பரந்து [illegible] தயாமூலதன்மம் தழைத்தோங்கவும் பல்வழியிலுபதேசித்தருளுவாராய், வேதசமரச[illegible] -

நிடதக் கருத்தடங்கிய திருவருட்பா மலர்வாய் மலர்ந்தவரும், சுத்தசன்மார்க்கியாகிய ஆளுடைய வடிகளது முத்திப்பேற்றை யுள்ளபடி "அன்புருவம் பெற்றதன்பின் னருளுருவ மடைந்து பின்ன, ரின்புருவ மாயினை நீ யெழில்வாத புரிறையே,, எனவும், "உயிரநுபவ முற்றிடி லதனிடத்தே யோங்கருளநுபவ முறுமச்செயிரினல் லநுபவத்திலை சுத்த சிவாநுபவ முறுமென்றாய்,, என ஆளுடைய பிள்ளையா ரநுக்கிரகமும், சந்தானமுறைமையையும் தெள்ளிதிற்றெரித்த தேசிகோத்தமராய் விளங்கி இற்றைக்குச் சுமார் நாற்பது வருடங்களுக்கு முன் சென்னை (மதராஸ்) யிற் சகளீகரித்திருந்த சற்குருமூர்த்தி, ஸ்ரீமத் திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகளது அற்புதச் சரித்திரச்சுருக்கம் சிறியேனது சிற்றறிவிற் கெட்டியவண்ணம், ஷை சற்குருமூர்த்தி திருவருட்டுணையாம் புணைபிடித்துச் சொல்லப்படுகிறது. மகானது சரிதமென்று பெரியர் முதலியர் கொள்ளப் பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

## சோணாட்டுச் சிறப்பு

காட்டரண், மலையரண், நீரரண் முதலிய காப்புடன், நெய்தல், முல்லை, மருதம், குறிஞ்சி, பாலை முதலிய ஐவகை நிலங்களும் அவையவைக்குரிய உரிப்பொருள் கருப்பொருள் மலிந்து, செழித்து, தவத்தர், முனிவர், முதலியர் வசிக்குமிடங்கள் செறிந்து எக்காலத்தும் மாரிவளம், நிலவளம், குடிவளம் முதலிய குறைவின்றிப் பார்ப்போர் கேட்போராய மக்களுக்கு களிப்பை விளைத்துப் பூமகளுக்கோர் திலகம் போன்றதாய் சைவமணமும், பத்தி, ஆசாரம், ஒழுக்கம் முதலியவற்றில் மேம்பட்டுக் குறையாச் செல்வத்தோடு கூடிய நல்லரசாற் காக்கப்பட்டு விளங்கிற்கும் சோணாடென்பாதம்.

## ஆற்றுச் சிறப்பு.

அந்நாட்டை யணிசெயத் தேவர்பிரான் கருதியபடியோ, அல்லது அந்நாட்டார் தேவர்பிரானை வழிபட்டபடியோ, மாரிக் காலத்தும், கோடைக்காலத்தும், செழுமை கலந்து, கரைபுரண்டு, முத்து, சந்தனம், யானை மருப்பு, கரும்பு, மூங்கில் முதலியவற்றை யிருகையாலு மேற்றுக்கொள்வோர் தாத்திறகேற்றவாறு பாத்தளித்துக்கொண்டு, "தேவரிற் பெரிய மாமகிழாளியர்,, குறு முனிவன் குறைக்கிரங்கி புண்ணிய தீர்த்தங்களை விளக்கும் கவேரவிருடியின் புத்திரியாகி அக்குறுமுனிவன்வசத்திருந்து சையமலைநின் றும்நீங்கித்தேவர்கோன் இடுக்கண்டீர்த்து, தன்னையடைந்தார்யாவராயினும் அவரவர் விருப்பத்தை நிறைவேற்றி, இருமருங்குஞ் சைவக்கோயில்களால் பெருமைபெற்று, மிக்க புனிதத்தீர்த்தமதாய், பொன்னி, காவிரி எனப் பெயர்வாய்ந்த தெய்வநதி யொன்றுண்டு. அதன் பெருமை நாவாலளப்பரிதாம்.

## மருதூர்ச் சிறப்பு

இவ்வகைய நதி பரவிடும் நாட்டில் ஸ்ரீ உபமன்னிய பகவானது பிதாவாகிய வியாக்கிரபாதர் பேரன்புசெய்து பூசித்திருந்து நித்தந் திருநடங்கும்

பிலெங்காரணத்தாற் பெரும்புற்றப் புலியூரென்றோர் காரணநாமம்பெற்று, சிவ பெருமான் சிதாகாய வடிவமாய் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ சிதம்பர மஹா க்ஷேத்திரத்தின் சார்பில் ஐந்திணை சேரகத் தமிழின் றுறைநுகர்ந்து புறத துறையின், வந்த பொருளவை கொண்டு செய்வனசெய், மாக்கள் மலிந்து பலவளங்களுடன் சிறப்புடைய மருதூரென்னும் ஓர் தெய்வத் திருப்பதி யுளது.

## இராமைய பிள்ளை யவர்களின் சரிதம்.

அத் தெய்வத் திருப்பதியுள், குருலிங்க சங்கம பத்தியும், கல்வி கேள்வித் திறமும், சிவபணியும் சிவத்தியான முதிர்ச்சியு முடையராய்ச் கருணிகதுல தீபமாய்ப், பழைமைப்பட்ட "ஆலயகாசிஷி கோத்திரத்தில்,, அவ தரித்து "இராமையபிள்ளை,, என்னும் பெயருடைய வோர் பெரிய ரிருந் தனர்.

அவர்க்கு வாழ்க்கைத் துணைநலனாக ஐவர் பன்னிய ரிருந்து சிவபதம் பெற்றனர். மேல் பொன்னேரி யென்னுங் கிராமத்து ரந்தாமணி விளக்கும், கற்பிற் கருந்ததியும், பொறைக்குப் பூமிதேவியும், அறத்திற் காமக்கண்ணி யும், கற்பி லருந்ததியும், பெருமையி ல்நுகையையும் நிகர்த்து, "தெய்வந் தொ ழாள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யுமழை,, "தற்காத் துத் தற்கொண்டாற் பேணித்தகை சான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்,, என்னும் பொய்யாமொழிக் கிலக்காகி விளங்கிய சின்னம்மையாந் திருநீங்காசச் "சின்னம்மை,, என்னும் மாதரசியார் அவர்க்கு "இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு,நல்லாற்றினின்ற துணை,, "துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கு மில்வாழ்வான் றுணை,, என்பது நிறைவேற ஆருந்தாரமாய் ஆருத ஆதரவொத்து இல்லற மிலம்பட நடத்தி நாளவம் படாது நோற்று வந்தனர்.

## சின்னம்மையார் தவமும் புத்திரப்பேறும்.

இங்ஙனம் நிகழுநாளில், உள்ளூர் வெளியூர்களில் கல்வியயிற்றல், கிராமகணக்கெழுதல் முதலிய உத்தமச் சத்தியவழி யூதியம் பெற்று அவ மார்க்க நீக்கித் தவமார்க்கங் கைக்கொண்டு நாடோறும் அழகிய சிற்றம்பல முடையார்க்குப் பத்திசெய்து, "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த மக்கட்பே றல்லபிற,, "எழுபிறப்புந்தீயவை தீண்டாபழிபிறங்காப், பண்புடை மக்கட்பெறின்,, "படைப்புப் பலபடைத்துப் பலரோடுண்ணு, முடைப்பெ ருஞ் செல்வராயினு மிடைப்படக், குறுகுறு நடந்து சிறுகைநீட்டி, யிட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்து, நெய்யுடையடிசின் மெய்படவிதிர்த்து, மயக் குறு மக்களை யில்லோர், பயக்குறவில்லார் தாம்வாழுநாளே,, என்பனவற் றைச் சிந்தித்துச் சற்புத்திரப்பேறுவேண்டி எல்லாமுடையானை வேண்டி வந்தனர். "வேண்டுவோர் வேண்டிற் றீயும் விண்ணவன்,, இத்தவத்தம்பதி களுக்கு "சபாபதி பிள்ளை,, "பரசுராமபிள்ளை,, எனும் ஆண்மக்க ளிரு

வரையும், "சுந்தராம்மாள்," "உண்ணாமுலையம்மாள்," எனும் பெண்மக்க ளிருவரையும், திருவருள் பாலித்தனர்.

## சின்னம்மையார் சிவயோகியர்க்கமுதூட்டியதும் அருள்பெற்றதும்.

மேற் சில பகல்கழிய புலியூரித்த வந்தணன் இந்த தமிழுலக முய்ய வெண்ணியோ சின்னம்மை நற்றவமுதிர்ச்சி உலகுணர வந்தபடியோ சைவந் தழையவோ யாதோசிவெனுள்ளம் யாமுணரோம், ஓர் நாளுச்சிப்போது, திருமே னிமுழுதும் திருவெண்ணீறு சண்ணித்து, புலித்தோல், யோகதண்டம், யோகப்பட்டிகை, அக்கமணி, குண்டிகை முதலிய தாங்கி, ஐந்தெழுத்தென் ணுநாவினராய் முதியவோர் சிவயோகியர், அருப்பசியாற்றளர்ந்த கோலங் காட்டித் தம்பசிக் கன்னமிட வம்மையாரை வேண்டி நின்றனர். அவ்வம் மையார் இச்சைவர் திருக்கோலத்தைக் கண்ணுரக்கண்டு எல்லாம் வல்ல சித்தரிவராமென உட்கொண்டு பல படத்தகம் நயத்தை மெச்சி, தங்கணவரி வரை யக்காலத்துக் காணப்பெற்று நில்லையேயென வெண்ணித், தமக்கி யன்ற வண்ணம் நாவாரத் துதித்து, பணிவுட னுட்கொண்டோ ருயர்ந்த பீடத்திருத்தி, அருக்கிய பாத்திய முதலிய உதவி, பாதோதக முட்கொண்டு, ஆராவன்பிற்பூசித்து, திருத்தமமைந்த பரிகலந்திருத்தி, அறுசுவையுடன் கூடிய இன்னடிசிலால் நென்முனையும் மாவடிவு மூட்டிய வொப்பற்ற தாய ரைப் போன்று களிந்துண்பித்துக் களித்தனர். இவ்வகையில் மெய்யடிய ரன்பிற்கும், தொண்டிற்கும், இன்னடி சிலுக்கு "முழுவிருந்தாய," சிவயோ கியர் பசிதணிய வுண்டருளி யுளம் பூரித்து நிரம்பக் கருணையாற் கையிற் றிரு வெண்ணீறெடுத்து "அம்மே நின்தாத்திற் கேற்றநிது," வென மொழிந்து, விரைவிலென்போன்ற வோராண்மகப்பெறுதி என் றனுக்கிரகித்து நெற்றி யிற் சாத்தித்தம் மிச்சைவழிச் செல்வழிச்சென்றார், அவ்வமயத்து அவ்வம் மை பரவசத்தராய் சிவயோகியர் பாதந்தீண்டிக் கண்ணொற்றித் தாழ்ந்தத் திருவெண்ணீற்றை இருகரத்தேந்தி யுட்கொண் டகமகிழ்ந்துத் தங்கணவர் வந்தபோது நடந்த வரலாற்றைக் கூறிக் களித்திருந்தனர்.

## திருவருட்பிரகாச வள்ளலார் திருவவதாரம்

பின்னர் சின்னம்மையார் முத்துக்களைக் கருவில் வைத்த செல்வச் செங்கரும்புபோல் வயிறுவாய்த்துக் கரு வளர வளர மேனி விளர்த்துப் பச் சை நரம்பேரடிக் கண்பசந்து குழிய மயக்கப் பொய்த்துயில்கொண்டு புளிக் குடியும் விரும்பிச் சிவசிந்தனையோடும் அக்கருவைப் போற்றிவந்தனர்.

இங்ஙனம் பத்துத்திங்களுருடாகவே அவ்வம்மையார் கலி சகஉகுஉ-ல், நிகழும் சுபானுவுடு தட்சணாயனம் வருஷருது புரட்டாசிமீ உகவ சுக்கில பக்ஷம்த திதிய ஆதிவாரம் உதையாதி உகஉ-க்கு மீனலக்கினம் சித்திரைநட் சத்திரம் ச-ங்கால்; துலாவிராசி கூடிய (இங்கிலீஷ் 1823-ம் வுடு அக்ட்

டோபர்மீ 5உ) சுபதினத்தில், உலகில் பல்வகைய நல்லொழுக்கம் பரவச் செய்யவே யருட்டிருமேனி கொண்டு சிவஞான பானுவாய் "மகன்றந்தைக் காற்று முதவியிவன்றந்தை யென்னோற்றான் கொல்லென்னுஞ்சொல்,, என்னும் பொய்யாமொழிக் கிலக்கியமாய வோர் சுபுத்திரப்பேறுண்டாயது.

இவ்வாறு பெறலரும் அருமைமைந்தனைப் பெற்ற பிதாவானவர் புத்திரப்பேற்றிற்குரிய பல்விழாக்களையும், ஜாதகன்மம் முதலியவற்றையுங் கிரமப்படி நடத்தி பந்து மித்திரர்களுடன் அப்பிள்ளைப் பெருமானுக்கு "இராமலிங்கம்,, என்னு மியற்பெயரைச் சூட்டி யழைத்துக் களித்தனர். பின்னர் இப்பிள்ளைப் பெருமானும் செங்கீரை, தால், சப்பாணி, அம்புலி, முத்தம், வாரானை, சிறுதே ருருட்டல், சிற்றிலழித்தல் முதலிய பருவங்களை முறையே கடந்து வருவாராயினர். அக்காலத்து பெறலருமகவைப் பெற்ற இராமையபிள்ளை சிவபதமடைய, மேலிவர் மூத்த சகோதரராகிய சபாபதி பிள்ளை அவர்கள் சென்னை சேர்ந்து அவ்விடத்து பிரபல வித்துவானாகியிருந்த உரையாசிரியர் - காஞ்சிபுரம் - சபாபதி முதலியாரிடம் கல்வி பயின்று தேர்ச்சியடைந்து ஆங்குள்ளவோர் வித்தியாசாலையில் உபாத்தியாயராயமர்ந்து அதில்வரும் ஊதியங்கொண்டு தங்குடும்பத்தைப் பாதுகாத்து வருவாராயினர். புராணப் பிரசங்கமும் செய்து வந்தனர்.

அது காலத்து இவர் ஐந்து வயதில் முறையே வித்தியாப்பியாசஞ் செய்யப்பெற்றுப் பின்னர்த்தந்தமையனாரையே வித்தியாகுருவாகக்கொண்டு அவரிடம் செந்தமிழ்க் கல்விபயின்று வந்தனர். "ஐந்திலறியாரைம்பதிலுந் தெரியார்,, என்பதற் கேற்பச் சுவாமிகள் மிக்க ஊக்கத்துடன் கற்றே வந்தனர்.

## சுவாமிகள் தேவோபாசனை.

இவர்க்குப் பூர்வவாசனை கைகூடலால் குருலிங்கசங்கம பத்தியும், "தன்னையுடையார் தனித்தலைமையை யுடையார்,, என்னும் ஞானமுதிர்ச்சியும்பிறநற்குணங்கள் வளரவும்,தமையனாரிடம் பயிலுங்கல்வியிற் றெளிந்து ஏகசந்தக் கிராக்கியக்கியத்தன்மையும் யடைந்து, குருவருள் கைகூட, தமையன் சிவதீக்ஷைபெறத் தாமும் பெற்று, சரியை கிரியை யோக ஞானவாய்ப்பமைந்து ஆளுடைய பிள்ளையார் சந்தான அகமுக குருதீட்சைபெற்றுத் திருவெண்ணீற்றுப்பை, திருமந்திரச் சிறபுத்தகம், அக்கமாலை இவை கொண்டு சிவசின்னங்களுடன் இளையபிள்ளையாரை உபாசித்து வந்தனர். இவ்வுபாசனை பலத்தால் எக்கலையும் ஐயந்திரிபற வோதாதுணருஞ் சத்திபெற்று அவையும் அவ்விளையபிள்ளையாரருளானே நிரம்ப, வேதாந்த, சித்தாந்த முதலிய வாறந்தங்களின் முடிபுணர்ந்து அவைகளிற் சாதுரியமாகவும், அழுத்தமாகவும், இனிமையாகவும் சம்பாஷிக்கவும், ஆன்மார்த்ததெய்வத்தை "திருத்தணிகைப்பதிகம்,, முதலிய பாக்களால் வாயாரத் துதித்துச் சிவானந்த வெள்ளம் அம்மூர்த்திவிளக்கியருள வநுபவித்துங் களித்திருந்தனர்.

## திருவொற்றியூருக்குப் பத்திசெய்தல்.

"பூலோக சிவலோக,, மென்று எம்மருமைத் திருவெண்காட்டடிகள் போற்றியுய்ந்த "திருவொற்றி,, யம்பதியின் அருமை பெருமைகளைப் பெரியோர்கள்பால் கேட்டறிந்து நியமமாக நாடோறுஞ் சென்று "எழுத்தறியும் பெருமானை,, வணங்கித் தோத்தரித்து வந்தனர்.

## சற்குரு தெரிசனம்

இவ்வகை யொழுகுநாளில், "மனம்,, என்னும் மதயானையின் வசம் நீங்கி "உன்பற்றொழிய வொருபற்றுமில்லை யென்னை யுடையவனே,, எனச் சிவனிடம் தம்மை யொப்பித்துச் சற்குருதரிசனமும் அனுக்கிரகமும் எதிர் பார்த்துத் தமது பாசனுமூர்த்தி வணக்கஞ் சிறக்கச் செய்து நின்றனர். இவ் வழிபாட்டிற் கிரங்கிய முழுமுதற்கடவுள் தவக்குறை முடிக்கவந்தாரை யுய் விக்கவேண்டி, சடைமுடி, மான்மழு, காளகண்டம், திரிநேத்திரம் முதலிய மறைத்து மானிடச்சட்டைசாத்தி நால்வர் சீடர்கள் புடைசூழ அச்சைவக் கோயிலின் ஓர்புறத்து இவர் வரவுநோக்கி யிருந்தார். திருவருள் கூட்டுவிக்க வழக்கம்போல் தமது நேசருடன் கலந்து போமிவர் தம்வினை கழிந்ததுபோல வுடன் வருவாரும் திகைதப்பத் தாம்தனித்து சற்குருமூர்த்தியைத் தரிசித்து ஆனந்தக் கூத்தாடி, வலம்வந்து பணிந்து, வசமிழந்து, மெய்ச்சிலிர்த்து, ஆராமை காட்டி, உய்வகை காட்டவேண்டி எதிர்நிற்றலும், அக்குருநாயனும் "அருச்சனைபாட்டேயாகும்,, ஆதலால் பரமசிவப் பிரபுவைத் தினமும் நிய தியாகத் தோத்தரிக்கக் கடவையெனக் கட்டளையிட்டுக் கடைக்கணித்து தம் மிசைவழிக் கரந்தனர்.

## திருவருட்பாபாடியது

அக்குருவாணையை மேற்கொண்டு தாம் "திருவருட்பிரகாசவள்ளல்,, ஆகிப் பிரதிதினமும் திருவொற்றிக்குத் தமது ஆன்மநேயர்களுடன் சென்று நியமமாகவும், முறையாகவும், எழுத்தறியும் தியாகப் பெருமானை, மனமொழிமெய்களாற் றுதித்து வருவார். ஒருநாள், இரவு பசிப்பிணி வருத்தத்துயி லுறும்போது எல்லாம் வல்ல சித்தர் "குருக்கள்போல்,, வேடந்தாங்கி வந்து துயிலுணர்த்திப் பசிக் கன்ன மிட் டனுக்கிரகித்தனர். இத்தன்மையை இவர் நெஞ்சறிவுறுத்தலில், "அன்றொருநாளும் பசிகண்டறிந்தோ தரியாது, நன்றிரவிற்சோறளித்த நற்றயாளன்,, என ஆராமையால் வெளிப்படுத்தி யுய்ந்தனர். இவ்வகையானே பலவகையபாவினங்களால் "திருவருட்பா,, என்னும் திருமுறைகள் ஆறையும் அருளிச் சேமஞ்செய்து வைத்தனர்.

## திருமணம்.

அதுகாலையில் இவர் தன் வயமிழந்து சிவமயமாகி மகிழ்வொடு வாழு நாளில், சின்னம்மை யாம் தாயும், தமையன்களிருவரும், தமக்கையும் உலக விவகாரத்துக்கொப்ப மணவினைமேற் கொண்டனர். இவர் அம்மணத்தைப்

பல்வகையில் விலக்கவும் மூத்தோராது மனக்குறை நிலைக்கக்கண்டு, ஆளுடையபிள்ளையார், சிவபாதவிருதயர் வேண்டுகோட் கிணங்கியபடி இணங்கி நின்றனர். அதன்மேல் இவரது தமக்கை புத்திரியாரை மணமுடித்து அகக்கரணசேட்டைநீங்கிச் சடங்கியற்றிப் பிறகு பள்ளியறையி லம்மாது ஸ்ரீயை நீபமெடுத்து பூமியில் வைத்தல் வேண்ட, அவ்வம்மணி கூசியொதுங்கத் தாமே எடுத்து வைத்துக்கொண்டு மேலுத்தரீயம் வாங்கித் தரைமிசை விரித்துக் கிடந்து "திருவாசகம்,, பாராயணஞ் செய்தருளினர். மேலம்மாது உலகபோக விச்சையறியாது வினைவசத்தினின்று சிவபதம் பெற்றனர்.

## போதகாசிரியராயது

இவ்வகையாற்றுனே தாம் பரசமயப்படாது சொந்த வழிப்பட்டு வாழ்வாராகித் தம்மை நாடிவந்த ஸ்ரீனிவாசவரதாசாரியர், தமது நல்லம்மான் புதல்வர் பொன்னேரி - சுந்தரம்பிள்ளை, காயாறு-ஞான சுந்தர ஐயர், நரசிங்கபுரம் - வீராசாமி முதலியார் முதலியர் இலணக்க, இலக்கியபாடங்களையும், திருவாசகம், ஒழிவி லொடுக்கம் முதலிய ஞான சாத்திரங்களையு மோதித் தெளிவடைய வனுக்கிரகித் திருந்தனர். இவரியற்றிய நூற்கள் உலகமறியும். பரிசோதித்தவையும் அற்றே. அதை விரிப்பிற் பெருகும் ஓதுவித்தலில் ஐயந்திரி பறப்பக்குவம் பார்த்துப்பகிர்ந்தளித்தது யாவர்க்கும் இவரதுகருணையை விளக்கியபடியாம்.

## எந்தையா ரடிமைபூண்டது

இவ்வமையத்து, இச்சுவாமிகள் எனது பாட்டனாராம் **தொழுவூர் - செங்கல்வராய முதலியாரது** ஆன்மநேயராம். எமது பாட்டனார் வாணிபமேற்கொண்டு பூடிகிராமஞ்சென்று சிவபதமடைய எந்தை வருந்தி இவ்வெளிகேமுட்டுப்பாடாக சென்னை திரும்பி மிகவும் சிக்கனமாகக் குடித்தனஞ் செய்து வருநாளில், **காளவாய் - தப்பாண்ண** முதலியாரென்னும் பெரியர், கடவுளருளால் எந்தையாரைச் சுவாமிகளிடம் அனுமதிபெற்றுச் சேர்த்தார். அதுகாலத்தில் சுவாமிகளும் எந்தையைநோக்கித் தரமறிந்து "**புதியவனல்லன். என்பிள்ளை எனக்குக் கிடைத்தது**" என்று மகன்மைபாராட்டி ஏற்றுக்கொண்டனர். மேல் எந்தைக்கும் மற்றையர்க்கும் தாம் போதிக்கவேண்டிய விடயங்களை வெகுவாய் உபந்நியாச வாயிலாகவே போதித்ததுந் தவிர, எந்தையைச் சோதித்து, குளவி புழுவைத் தன்னிறமாக்கலையோசித்து இளையபிள்ளையார் உபாசனையை முறையே யுபதேசித்து சாதாரண மாணாக்கன் போலப் பாவியாது, குருசிட பரம்பரையிற்றுனேகொண்டு தாமறிந்த பேற்றையும் பிறவற்றையும் அறிவுறித்தி வந்தனர். இருவருக்கும் நடந்த வரலாற்றைப் பின்னர் வெளிப்படும் இச்சுவாமிகள் சரித்திர விரிவிற் காணலாம். இக்காலத்தில் இவர் தாயார் சிவபதமடைந்தனர்.

## தலயாத்திரை செய்தது

இச்சுவாமிகள் சென்னையிற் றங்குங் காலத்தில் பரம்பரைச் செல்வராய் "**பாளையம் - சோமசுந்தரஞ் செட்டியா ரவர்கள்**,, திருமனையில்

அன்பு நிறைந்த பெரிய புராணம் பிரசங்கித்து வருவார். அதற்கப் பிரபு தக்கபடி பணிவிடையை இவரறியாவண்ணம் நடத்தி வந்தனர். பின்னர் இவரது சகோதரர் பரசுராமப்பிள்ளை யவர்கள் பிணியால் வருந்த அதை நிவர்த்திக்க சிதம்பரம் நோக்கிச் சென் றமர்ந்தனர். மேல் நடக்குங் கருமம் கருதி சிவலீலை வயத்தராய் மற்றைய தலயாத்திரை செய்ய வெண்ணிச் சென்று தரிசித்துத் துதித்து திருவூற லுச்சவத்திற்குத் திருப்பாதிரிப்புலியூர் வந்தனர். அன்றைப்போதில் பிரமசமாஜக் கோட்பாடுடைய ஒருவர் வந்து வாதிக்க அவர்க்குவேண்டிய சமாதானமும் அறிவும்புகட்டி யனுப்பியர்.

## சிதம்பரந்தரிசித்து கருங்குழியடைதல்

அங்கிருந்து சிதம்பரஞ் சென்று பொன்னம்பலத்திற் றிருநடங் கும்பிட்டு "ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள,, என்னும் பெரியபுராணத் திருவிருத்தத்தின் சகசவநுபவம் பலிக்கத் தரிசித்துப் பரவசமாகி யரிதுபுறம் போந்து சிவத்தியானத்தோடும், தமது பிறப்பிடமாகிய மருதூர்க்கு வந்து சிவபதமடைந்த தமது சகோதரர் பரசுராம பிள்ளை யவர்களுக்கான சைவக்கிரியைகளை முடித்து பலவற்புதங்களை நடத்திக்கொண் டங்கிருந்தனர். பின்னர் தாங் கருங்குழியி லமர்ந்து "கணக்கிலவேதாணி,, என்பா ரொருவர்க்கும், பிராமணசந்நியாசமூர்த்தி யொருவர்க்கும் உண்மைமையுணர்த்தித் தெய்வீகத்துட னங்கமர்ந்திருந்தனர்.

## திருவருட்பா வெளியாயது.

இச்சுவாமிகள் தங்குரு வருளாணையாலும், துணையாலும், வலியாலும், பிரேரணையாலும், சகசவநுபவ மேலீட்டாலும், உலகத்தான்மாக்களிடத்துத் கருணையாலும் அவ்வமயங்களில் ததும்பித் தோத்தரித்துப் பொறித்துச் சேமஞ்செய்து வைத்த "வருட்பாக்களில்" ஒரோர்பகுதிகளை யடுத்திருந்தார் தாங்கண்டவாறு பாராயணஞ்செய்து பரவச் செய்தனர். அவற்றிற் சில அச்சிடப்பட்டு வழங்கின, ஆனல் முற்றும், ஒருவரும் ஓதி யுணர்ந்தனரல்லர். ஏனெனில் "அளவாத பேரன்புசெறிந் தருளைவிளைவித்துத், தளவாருநகைக்கயற்கட்டைய விடங்கொண்ட பிரான், வளமாருங் கழன்மலரோடிரண்டறுத்து வாழ்விக்கு முளவாலே யருட்பா வென்றொரு நாமம் பூண்டதுவே "என்றெந்தையார் மேற்படி "திருவருட்பா வரலாற்றிற்" கூறியபடி திருப்பெயர் கொண்டு விளங்கியது. அது நிற்க. முற்றும் சென்னையிலும் புறத்து மிருக்கும், சுவாமிகளது அடியர்களும், பரிபாகிகளும், ஓதி யுணர வேலாதகுறையை நிவர்த்திப்பான் வேண்டி, செல்வராய முதலியார், இரத்தின முதலியார், மயிலை - இக்கட்டி - சோமசுந்தரம் செட்டியார் முதலியர் பிரயத்தின பூர்வமாய் எந்தையாரைக்கொண்டு திருமுறைகளாக வகுப்பித்து அச்சிட்டு வெளியிட்டனர். மற்றையபடி காரணங் கருதிய பெயரால் விளங்காது "திருவருட்பா,, வென்று இத்திருமுறைகள் இந்நிலவுலகத்து நில

வுவா னேனெனின், நன்று கடாயினுய், "மருளாலே சிலரென்போன் மருளாலே மயங்கியுணர்ந், தருளாலே யுரைத்ததென வருட்பாவினுரை கொண்டார், தெருளாதேன் சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கு, மருளாலே யுரைத்ததென வருட்பாவினுரை கொண்டாம்,, என எந்தையார் வரலாற்றினுய்த் துணரவைத்த திங்கறியற் பாலதாம். மேல், ஆறு திருமுறைகளாக வகுத்தமை யெற்றுக்கெனில், கூறுதும். "அத்தகைய திருவருட்பா வுபாசனை லீலைகண் முறைமை, யுய்த்தறியச் சோத்தமொடு சாத்திரமா யுறுதலினுற், சுத்தமுற வெப்பொருளும் விளக்கெழுவாய்த் தொல்லெழுத்தை, வைத்த வெழுத் தைந்தினுண்மை மலர்விக்கும் வாய்மையினுல்,, "அறுசமயத் துள்ளாரு மயலாரு மவரறியப், பெறுபொருளு மளவாத பெரும்பொருளுங் காட்டலினு, லுறுதிபெறு மத்துவா வதன்மேலாயுறு பொருளை, மறுவறக் காட்டு கையாலு மற்றாறு முறையாக,, "பிரிந்து பிரியாதருளின் பெற்றிமிக்குப் பிணக்கறுமா, தெரிந்து முறை செய் தருளுஞ் சிறப்பானே திருவருட்பா, விரிந்தமுறையாறெனவே மெய்யருளின் ருெடர்பாட்டாற், பரிந்தன்ப ருலகமெலாம் பழிச்சு புகழ் நிலவியதே,, எனவும் வரும் எந்தையார் கூற்றுக்களா லறிக.

அவ்வாறு திருமுறைகளில், "ஆருவது முறை யாரியனுர் தம்மருளானே, வேருெர் சார்சேமுற்றன் றெம்வினைவிளைபாகம், தேருப் பருவந் தேர்ந்தென்றிசினேருறுது நிற்க, வீருர்மற்றை முறை வெளிவந்தமை விரிசெய்வாம்,, என்றபடி ஆருவது திருமுறையை நீக்கி முதனான்கு திருமுறைகளை யச்சிட்டு வெளியிட்டனர். ஐந்தாவது திருமுறையும் தகுமற்ற நோக்கி அப்போது நிறுத்தப்பட்டது.

## திருவருட்பா வாதம்.

இம்மாதிரியாகத்தானே, திருவருட்பாவின் நான்கு திருமுறைகள் வெளிவந்ததும், அக்காலையில் ஈழநாட்டினின்றும் சென்னை வந்து வித்துவானுகி வந்திருந்த, நல்லூர் - ஆறுமுக நாவலரவர்கள் அபிமானிகள் சிலர்க்கும், சுவாமிகள் அபிமானிகள் சிலர்க்கும், பத்திரிகைவாயிலாகவும் மற்றவகையாலும் பலவகைய வாதம் நிகழ முடிவில் "போலி யருட்பா மறுப்பு,, என்னும் ஓர் குதர்க்கம் நிறைந்த சுவடியொன்று மாவண்டூர்-தியாகேச முதலியா ரியற்றியதாக முகபத்திரத்துடன் வெளிவந்து பரிபாகிகள் பலர்க்கும் மனத்தாங்கலை யுண்டுபண்ணி யுலவியது. அதைக்கண்டார் யாவரும் எந்தையாரைப் பன்முறையிலும் வேண்ட இவரிசைந்து "போலி யருட்பா மறுப்பென்னும் குதர்க்காரணிய நாசமகாபரசு,, என்னுமோர் புத்தக மெழுதி சமரச வேத சன்மார்க்கத்தின ரியற்றியதாக வெளியிட்டு அதைக்கண்டித்து, உண்மையை யாவருமுணர்ந்துய்ய நிறுவினர். அதன்மேல் அந்நாவலரவர்கள் அபிமானிகளிற் சிலர் இராஜாங்க வாயிலாக வழக்கெடுப்ப அது நிறைவேருது ஒடுங்கி யொழிந்தது. அதோடு அவ்வாதம் முற்றுப்பெற்றது. நாவலரவர்களும் தஞ்சொந்த நாடேகிச் சிலகாலம் வதிந்து சிவபத மடைந்தனர்.

இவ்வகைய விருவகை வழக்கிலும் நமது சுவாமிகள் தாக்கற்று தமது சிவானு பூதியி லமர்ந்து உண்மைநெறியைத் தம்மை யடைந்த பத்தர்க்கும் பரிபாகி களுக்கும் அறிவுறித்தி வந்தனர்.

## வடலூரிலும் மேட்டுக்குப்பத்திலும் நிலைத்தல்.

பின்னர் சில ஆன்மநேயர்கள் வேண்டுகோளின்படி கூடலூரில் சிலகா லந் தங்கி யிருந்து சில தீராப் பிணியாளர்களது தீவினைகளைத் திருவெண் ணீறு ஓதி யளித்து நிவர்த்தித்து நீறுபூத்த நெருப்புப்போன்று தங் குருவ ருளை நாடிக்கொண்டே சகசநிட்டை கூடி யானந்தித் திருந்தனர். மேல், சிதம்பரம் நான்கு கோபுரமு மொருங்கே தோன்று மெல்லையாகிய வடலூ ரில் தமது 45-ம் வயதாகிய பிரபவ௵ வைகாசி௴ ௧௧௨ குருவாரத்தன்று, சன்மார்க்க விளக்கமுதற் பிரிவான ஜீவ **காருண்ணிய வொழுக்கத்தை** நூலாக வமைத்து அதைச் சிதம்பர தீட்சித ரொருவரைக்கொண்டு பூசிக் **கச்செய்து, சத்தியதருமச்சாலை, சத்திய ஞானசபை, சமரசவேத பாட சாலை, சன்மார்க்கசங்கத் திருக்கோயில், நிருத்தசித்தி விநாயகர் ஆலயம்,** முதலிய நிருமிக்கவேண்டித் தருமச்சாலையைத் தாபித்து அதிற் றமெழுந் தருளி யிருந்து பல்லாயிரஞ் சனங்களுக்கு முறையே அன்னமிட்டுக் களித்த னர். பிரமோதூத௵ த்தில் வடலூருக்குச் சுமார் மூன்றுமயில் தெற்கிருக் கும் **மேட்டுக்குப்பத்தில், சித்திவளாகம்,,** என்னும் ஆச்சிரமம் வகுத்து அதில் நிட்டைகூடி யிற்கையில் "**அருட்பெருஞ் சோதியைத்,,** தரிசித்து "**அருட்பெருஞ்சோதி யகவ,,** லென்னும் நூலை வரைந்து வைத்தனர்.

அவ்விடத்து பலவடியர் கூடினர். அதுகாலத்தில் சுவாமிகள் அங்குள் ளாரை நோக்கி நீவிர் எல்லாம்வல்லரும், எங்குமுள்ளவரும், சர்வசாட்குண்ய நவவடிவிறந்த சோதியாகி எச்சமயங்கட்கும் துணையாகித் தூரமாகிப் பொது வாகிச் சிறப்பாகித் தத்துவாதீதமாகி நிலவும் முழுமுதற்கடவுளைக் காணவிரும் பின், இது தொடங்கிப்புலை, கொலை, கள், காமம், பொய், சூது, வஞ்சம் முதலிய விலக்கிச் சீவகாருண்ணியம் பெற்று ஈசுரபத்தியை வழுவாது நடத் திவாழ்மின்,, என்று உபதேசித்து வந்தனர். அவ்வகை நடையினர்க்குப் **பாசவைராக்கியம், பிரம்மக்கியானம்** என்பவை உண்டாக்குந் தன்மை திருவருள் கூடுங்காலத் துண்டாம் எனவும் வற்புறுத்தி வந்தனர். மேலும் தமது சகசவநுபவ முதிர்ச்சியைப் பலவகையிலும் பரிபாகிகளுணரும் வண் ணம் எடுத்தோதி வந்தனர்.

## ஞானசபைக் கட்டிடம்.

ஸ்ரீசுவாமிகள் வடலூரில் 40-காணி விஸ்தீரணத்திற்கு **உத்தரஞான சிதம்பர** மெனப்பெயரிட்டு, பிரஜோற்பத்தி௵ ஆனி௴ தொடங்கி யடுத்த தைமாதத்திற்குள் அட்டகோணத் தாமரை போன்ற வடிவில் ஓர் சபையை விதித்துப் புடைநின்றாரை நோக்கி இக்கட்டிடம் கடவுளருளால் முடியும். அதுகாலத்து அவர் எல்லாம்வல்ல சித்தனுய்ச் செத்தாரை உயிர்ப்பித்தலுடை

னுய்க் கூடாவொழுக்கினரைத் தண்டிப்பவனுய் வெளிவருங் காலம் நெருங்கும் என வற்புறுத்தினர். ஆயினும் தற்சூழ்ந்தார் தாம் முடிக்கவருளவேண்டலும் அதற்கு "அது முட்டாகும், முயற்சித்துப் பாருங்கள்,, என வாளாவிடுத்தனர். இச்சபையின் அந்தரார்த்த விடயங்களைப் பின்னர் வெளிவரும் இவரது சரித்திரவிரிவிற் பரக்கக்காணலாம். சமரசவேத சன்மார்க்க சங்கக் கோட்பாடுகளும் மற்றைய விடயங்களும் அற்றே. அச்சபைக் காராதனை கற்பூர தீப ஆர்த்தி யொன்றேயாம்.

## திருவுரு மறைத்தல்.

இவ்வகையானே ஞானயோக சமாதியில் நிலைத்தானந்தித்த ஸ்ரீசுவாமிகள் தம்மருகிருக்கும் நண்பர்களை நோக்கி, "அன்பரே நாம் மேற் சில கருமங்கள் முடிக்க வெண்ணியுள்ளோம், அதுகாலத்து நம்மேனி உலகருணக் கண்ணிற் கெட்டாது மறையும். இத்தேகத்தை நும்மி லொருவருந் தீண்டவாவது வேறுவகை செய்யவாவதேலாது. சித்தியை யடைந்து நெடுங்கால மிருந்து பிறகு ',ஞானசம்பந்தக்தநுந்துவ,, பதவியைப் பெறுவோம். நீவிர் இவ்வறையைப்பூட்டி முத்திரித்துத் திறவுகோலை இதற்குள்ளேயே ஊக்கி விடுவீர் எனப் பணித்தனர்.

மேல் தம்மேனியை யருட்டிரு மேனியாக்கிச் சன்மார்க்க சாதன முதிர்ச்சி கைகூட மேற்படி மேட்டுக்குப்பம், சித்திவளாகத் திருமடத்தில் ஞானநிட்டை யமர்ந்து கலியாப்தம்-சகூளஅ-ல் நிகழும் ஸ்ரீமுக(ஆ)) தைமீ ககூ சுக்கிலபக்ஷம் சுக்கிரவாரம் புனர்பூச நட்சத்திரங் கூடிய தினத்திரவு மேற்கூறிய நிட்டை யமர்ந்து தம திந்திரியக் கதவை மூடிப் பூட்டி நின்றனர். இக்குறிப்பறிந்த எந்தையார், ஆபேர்-குருக்கள் என்னும் சபாபதி சிவாச்சாரியர் முதலியர் வெளிக்கதவைப் பூட்டி முத்திரித்துத் திறவுகோலை குருவாணைப்படி அவ்வறைக்குள்ளேயே ஊக்கிவிட்டனர்.

பின்னர், அதிகாரிகளால் வலிந்து அவ்வறை திறக்கப்பட்ட போது சுவாமிகளருளியவண்ணம் வெறும் வெளியாகக் கண்டார் திகைப்பும் அச்சமுங் கொண்டகன்றனர். இன்றும் அவ்வறை பூட்டியே பூசிக்கப்பட்டு வருகிறது. இம்மடத்திற்குத் தெற்குப்புறம் சுவாமிகள் எப்போதும் வீற்றிருக்குமிடத்தில் அவரால் தாபிக்கப்பட்ட "சத்தியஞானதீபம்,, விளங்கி வருகின்றது.

இச்சுவாமிகளது அற்புத சரித்திரம் அறிந்தார் பலர்க்கும் ஆநந்தந் தருவதாயினும் புல்லறிவாளனுய வெம்போல்வார்க்கு நினைத்தற் கரியதிற் கரியதாம். ஆயினும், ஆசைதூண்ட ஒருவாறு சொல்லிப் பெரியர் கருணையால் நிரம்புமென்று தலைவணங்கி நிற்கின்றனன்.

## சுவாமிகள் வாக்குவன்மை.

நமது சுவாமிகள் அடிநாட்களில் "திருவாசகம்,, "தாயுமானுர்பாடல், "திருமந்திரம்,, ஆகிய விந்நூற்களை இடைவிடாது பழகி வந்தன ரென்பது கேள்வி யுணர்ச்சி. ஆதலால், இவரது வாக்கும் அவைகளைப் பின்பற்றியே

செம்பாகமாகப் படிப்போர்க்கும், கேட்போர்க்கும் இன்பம் விளைத்து, மனத்தைக் கவரும் குணமுடைத்தாய் நிலவுகின்றது. அப்பாக்களிற் பொதிந்துள்ள கருத்துக்களை யாராயப்புகின் அவை மனுடதரத்ததன்று. என்னை? ஆறந்த சாத்திரங்களின் றுறைகளைச் சுவாமிகள் நம்மனோர்க்குக் கருணையானே போதிப்பான் வேண்டி யற்றநோக்கித் தொகுத்தும், விரித்தும் விளக்கியும், புதுக்கியும், மயங்காமை திருத்தியும், வரன்முறை வகுத்தும், பல துறை ஆய்ந்துந் தெளிய வைத்துள்ளனர். ஆதலின், கருத்துக்கள் மிக வாழ்ந்துக் கொள்வோன், சொடுப்போன், அறிவோன், அநுபவிப்போன் முதலியர் தரத்திற் கேற்றவாறு புலப்படுகின்றன. இது வேதாகமத்தின் றன்மைகளாம். ஆகவே, இத் "திருவருட்பா" வும் வேதாகமத்தின் பாற்பட்டதென்பதே தேற்றம்.

## சாத்திரக் கொள்கை.

சுவாமிகள் திருவாய்மலர்ந் தருளிய "திருவருட்பா" ஆறந்த நூல்களின் முடிபுகளை மேற்சொல்லியபடி யடக்கி யிருக்கையாலும், (1) சாங்கியம், (2) யோகம், (3) நியாயம், (4) பூருவமீமாஞ்சை, (5) உத்தரமீமாஞ்சை, (6) வைசேடியம், (7) சாத்தேயம், (8) காணபத்தியம், (9) வைஷ்ணவம், (10) சைவம், (11) கௌமாரம், (12) வைரவம் முதலிய சமய வாதிகளனைவரும் தாந்தாங்கொண்ட கருத்துடன் ஆராயுங்கால் அவ்வவர்க்கேற்ற வகைகளையும், மேற்கோட் பிரமாணங்களையும், விவரணங்கள், விருத்திகள், சூர்ணிகைகள், பாடியங்கள் முதலியவைகளை விளக்கிக்கொண் டிருப்பதாகச் சந்தோஷிக்கின்றனர். இதுமிக்க வற்புதமே. மானுடத்தரத்ததாகக் கொள்வதெவ்வகை. இதுவே சுவாமிகள் விரிக்கவெண்ணிய சமரசவேத சன்மார்க்கக் கொள்கையெனச் சில பெரியர் நேரில் சுவாமிகளிடம் அளவளாவின காலத்துத் தாம் ஊகித்துணர்ந்ததாகத் தெரியவருகிறது. ஆயினும், சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினையுடைய வடியேனு ளளப்பதற்கும் சிந்தித்தற்கு மரியதி லரியதாம். பெரியோர்கள் தம் சுவானுபூதியி லறிந் தின்புறுவர்கள்.

சுவாமிக ளியற்றிவை

## செய்யுள் நடை.

—(*)—

திருவருட்பா — ஆறு திருமுறைகள்.

## வசன நடை.

—(*)—

திருவருட்பாவிற் சேர்ந்தன:—

மெய்ம்மொழிப் பொருள்விளக்கம்,

ஜீவகாருண்ணிய வொழுக்கம்.
நித்திய விதி.

தனிவகையா யுள்ளன:—

ஔஷதி அகராதி.
தத்துவக்கூறு உபந்நியாசம்
மநுமுறை கண்ட வாசகம்.



இவற்றில் சேராத பல செய்யுணடை, வசனநடைப் பிரபந்தங்கள் பல வுள்ளன வாயினும் அவைகள் இன்னம் அடியேனுடைய கைக்குக்கிட்டில. கிடைக்கின் வெளிப்படுத்தப்படும். மேலும் தனிவகையா யுள்ளனவற்றை அச்சிடத்தகுந்த வேற்பாடுகள் செய்யப்படுகின்றன.

அது நிற்க,

## நேரிசை வெண்பா.

ஆரியனார் சீர்பாதந் தாங்க வமைசிரமும்
ஆரியனார் சீர்பாட வாநாவும்—ஆரியனார்
செம்மொழியே சிந்திக்கு நெஞ்சுந் தருந்தவமே
யெம்மையினும் வாழ்க வினிது.

என்னும் எந்தையார் கூற்றுற் றுதித்துய்வேனாக. சுபம்! சுபம்!! சுபம்!!!
திருவருட் பிரகாச வள்ளலார் திருவடி வாழ்க.

"வேலாயுத ஆச்சிரமம்"
சிறுகடல் கிராமம்.
1911ளு அப்க்டோபர்மீ 30உ

இங்ஙனம்,
சுவாமிக ளடிமைக்கடிமை,
தொழுவூர் - வே. திருநாகேசுவன்.



உ

சிவமயம்.

கணபதி துணை.

—)〰(—

# இந்நூலாசிரியர் சரித்திரச் சுருக்கம்.



## இந்நூலாசிரியர் திருவவதாரம்.

"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்துப்—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்ட
நன்னாடு சான்றோ ருடைத்து.,,

என்று நமது ஔவைப் பிராட்டியாரும், "தூயவளப் பெரியோர்வாழ் துண்டீரமண்டலம்,, என்று திருவெண்காட் டடிகள் புராணம் பாடியவரும் பரிவிற் புகழ்ந்த தொண்டமண்டலத்துக் குறும்பரசைக் களைந்தாண்ட **ஆதொண்டமான் சக்கிரவர்த்திக்குத்** துளுவநாட்டினின்றும் படைத்துணை வந்த நற்குடி நாற்பத்தெண்ணாயிர வேளாளர்கள் குடியேறிய அறுநான்கு கோட்டத்துள் மூன்றாவதாம் ஈக்காட்டுக்கோட்டத்தைச்சார்ந்த * **தொழூவூர் கிராமத்தில், பூவிருந்தவல்லி** மரபு, **சதாசிவமஹரிஷி கோத்திரம், போதாயன சிவசூத்திரம்,** வாத்தியார் வீடெனச் சிறந்த குடும்பத்திற் பிறந்தாராய் வியாபாரநிமித்தம் சென்னை வந்து நிலைத்த குடும்பத்தில் சகல நற்குணங்களமைந்த **தொழூவூர் - செங்கல்வராய முதலியாருக்கும்** அவர் தர்ம பத்தினியார் **ஏலவார்குழலி யம்மைக்கும்,** 1832-ம் ௵ ஆகஸ்டு மீ த்திற்குச் சரியான சாலிவாகனசகம் ௲௭௱௫௰௪-க்கு மேற் சொல்லாநின்ற **நந்தன** ௵ **ஆவணி** ௴ 3௳ அசுவினி நட்சத்திரங் கூடிய குருவாரத்தன்று செங்கல்பட்டு ஜில்லா, திருவள்ளூர் தாலூக்கா, 35-ம் நெ. சுரோத்திரியம் * **சிறுகடல் கிராமம், "வேலாயுத ஆச்சிரமம்,,** என்னு மில்லத்தில் அம்மரபிற்கும்,

---

* இக்கிராமங்கள் சென்னை தென்மகாராஷ்டிர ரெயில்வே, செவ்வாய்ப் பேட்டை ஸ்டேஷனுக்கு ஒரு மைல் தூரத்திலுள்ளன.

குடும்பத்திற்கும் பெருங்கீர்த்தி விளக்க வவதரித்தனர். இவாது பெரிய பாட்டனார் வேலாயுத முதலியார் சிவபதம் பெற்ற தினத்திரவு பிறந்த காரணத்தா லிவருக்கு **வேலாயுத முதலியார்** என அவர் திருநாமமிடப்பட்டது. இவருக்குப் பின் சபாபதி முதலியாரெனச் சகோதரரொருவரும், அம்மணியம்மாளெனச் சகோதரி யொருவருமுண்டாயினர். இவ்விருவரும் இவருக்கு நேர் முரணான குணாதிசய முடையர்களென்பது பந்துக்களும் நெருங்கிய நேசர்களுந் தெளிந்ததேயாம்.

இவர் ஐந்து வயதில் பள்ளிக்கு வைக்கப்பட்டு ஆரம்பத்தில் தெலுங்கும் சமுஸ்கிருதமுங் கற்றுப் பிறகு தேர்ச்சியுள்ள ஒருவரிடத்தில் தமிழ் பயின்று வந்தனர். இவர் இளமையிற்றானே, அன்பு, அடக்கம், பொறை, வாய்மை, தூய்மை, பத்தி, ஆசாரம், இன்சொல், பெரியோர்கேண்மை, மனச்சுத்தம், யுத்தி முதலிய நற்குணங்களமையப் பெற்றாராய்த் தந்தையைக் களிப்பித்து வந்தார். ஒத்த வயதில் தந்தையுடன் வியவகாரம் பயின்று வருபவர் ஓரமயத்து அவருடன் வாணிப மேற்கொண்டு பூடிக்கிராமத்திற்குச் சென்றபொழுது தந்தைக்கு இராஜபிளவை காண அங்கு அவரை யிழந்து சென்னைக்குத் திரும்பி சமுசார பாரம் பொறுத்தார். பிறகு ஜீவனோபாயம் முட்டுப்பட்டு பிதிராச்சிதங்களில் வசிக்கும் வீடொன்றே நிலைத்தது.

அக்காலையில், "பூவுலகிலீது சிவலோக மென்றே மெய்த் தவத்தோரோதுந் திருவொற்றியூர்" என்று திருவெண்காட்டடிகள் புகழ்ந்து முத்தி பெற்ற திருவொற்றியூருடைய படம்பக்கவாணருக்குப் பத்தி செய்வாராய்ச் செல்வாராயினர். அப்போது இவர் தந்தைக்கு ஆன்ம நேயர்களி லொருவரான காளவாய் - குப்பண்ண முதலியார் இவர் அறிவின் தீவரமறிந்து, இவரை அக்காலத்தில் சென்னையில் முருகக்கடவுள் வரப்பிரசாதியாகியும் சிவானுபூதிச் செல்வராகியும், முத்தி, சித்தி, வியக்தி யுபாயங்களை விளக்க வந்த குருமூர்த்தியாகிய **திருவருட்பிரகாச வள்ளலா ரென்னும் சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகளிடம்** சேர்த்தார். அவர் இவர் வரவை யெதிர்பார்த்திருந்தவரானபடியால் அன்புடனேற்று "**புதியவனல்லன் என்பிள்ளை எனக்குக் கிடைத்தது**" என்று அருமை பாராட்டினார். இவரும் தமதாசிரியரிடத்து எல்லா விடயங்களையும் உபந்நியாச வாயிலாகத் தெளிந்து விளங்கினார். இவரை அவர் பலவகையிலும் சோதித்து இளையபிள்ளையார் உபாசனை சித்திக்கச் செய்தார். மேலும் சுகூஷிப் பிரதிகக்ஷி வகுத்து இவரை வாதில் வெல்லுந் தேர்ச்சி செய்வித்து தமது மாணாக்கருட் சிறந்தவராக்கினர்.

பிறகு இவர் தமது குலகுருவாகிய வயலெல்லா நெல்லூர் - இரத்தின குருக்களிடம், சமயம், விசேடம், நிருவாண முதலிய சைவ தீக்ஷைகளை முறையே பெற்று சைவசித்தாந்தத்தை மேற்கொண் டொழுகினர். இவர் "அன்பிற் பெருகிய சிறப்பின் மிக்க அருச்சனை பாட்டேயாகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக" என்று தேவர்பிரான் நமது ஆளுடைய நம்பிகளுக்கு அனுக்கிரகித்ததைக் கடைப்பிடித்து, சிவபெருமானைப் பல செந்தமிழ்ப் பாக்களாற் றுதித்து வந்தனர்.

அக்காலையில் மைசூர் இராஜ்ஜியத்தைச் சார்ந்த பெங்களூரில், திருக்கலசை - கிருஷ்ணசாமி முதலியா ரென்பவருக்குத் தவப்பேறான "சிரங்கம்மாள்" என்னும் கற்பிற்கரசியைக் குலகுருவின் சகாயத்தால்மணமுடித்து பெங்களூரிலேயே சிலகாலம் வாசஞ்செய்தார். அடுத்தடுத்து சென்னைக்கு

வைத்த அருந்தமிழ்ப்பாக்களை வரலாற்றுடன் பரிபாகிகளுக்கு உபயோகமாம்படி அச்சிட்டு வெளியிட்டனர்.

இது காரணமாக அக்காலத்தில் சென்னையில் வித்வானாகி வதிந்த யாழ்ப்பாணம் - நல்லூர் - ஆறுமுக நாவலரவர்கள் அபிமானிகளுக்கும் இராமலிங்கசுவாமிகள் அபிமானிகளுக்கும் பல்வகைய வாதம் பொறாமையால் நடக்க முடிவில் "போலி யருட்பா மறுப்பு" என்னும் குதர்க்க பத்திரிகை வெளிவர, அதற்கு மறுப்பாக இவர் "போலி யருட்பா மறுப்பென்னும் குதர்க்காரணிய நாச மகாபரசு" என்னும் புத்தகமெழுதி உண்மை யாவருமறியும்படி செய்தனர். அதோடு அவ்வாதம் முற்றுப்பெற்றது. பிறகு திருவருட்பிரகாச வள்ளலார் பார்வதிபுர மென்னும் வடலூரிலிருந்த பொழுது இவரும் தமது குடும்பத்துடன் ஆசிரிய பணிவிடை செய்கையில், இவரது செந்தமிழ்ப்பாக்களை அவர் வரவழைத்து பலவித்வான்கள், பண்டிதர்கள், அறிவோர், அறவோர், சமரச வேத சன்மார்க்க சங்க வித்வான்கள் முதலியோருடன் ஆராய்ந்து அச்சங்கத்து மகத்துக்கள் முன்னிலையில் இவருக்கு "உபயகலாநிதிப் பெரும்புலவர்" என்று தீக்ஷாநாம மிட்டுக் களித்தனர். இதற்கு வேண்டிய ஆதாரம் அடியேனிடம் தற்காலத்திலு முள்ளது,

மேல்வருங் கருமம்நோக்கி வள்ளலார் இந்நில வுலகத்தாரது ஊனக் கண்ணுக்கெட்டாது மறைய, இவர் தமது பத்தினியும் எனது அன்னையுமாகிய சீரங்கம்மாள் முதலியார் சிவபதமடைய, அவ்விடமிருந்து ஒன்றுக்கும் பற்று வென்னைக் கைப்பிடித்து, நடுவில் பல விடுக்கண்களை யனுபவித்து சென்னை வந்து சேர்ந்தவர் இளைய சகோதராது வஞ்சனைக் காற்றாது அவரை விட்டு விலகி, பாளையம்-சோமசுந்தர செட்டியார், நாகை - கண்ணு - இராமலிங்கம் பிள்ளை, கூடலூர் - கனகசபை பிள்ளை முதலிய ஆன்ம நேயர்கள் ஆதரவில் சென்னை முத்தியாலுப் பேட்டையிலும், தண்டையார்ப் பேட்டையிலும் வசித்து வந்தார். அவ்வமயத்தில் பூண்டி - அரங்கநாத முதலியார். எம்-ஏ, என்பவா நேசம் நேரிட, அவரும், சோமசுந்தர செட்டியாரும் மற்றவர்களும் இவரை சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் தமிழ்ப் பண்டிதராம்படி செய்தார்கள். அக்காலேஜில் தமிழ்ப்பண்டிதராக பத்துவருட காலம் தமிழ்ப்புலமை நடாத்தி, மறுமண முடித்து அடியேனுக்குச் சகாயமாக தொழுவூர் - வே. செங்கல்வராய முதலியா ரென்னும் ஒரு கண்மணியை வைத்து, 1889-ம் ஆண்டு பிப்ரவரிமீ 22உக்குச் சரியான சர்வதாரி ஆண்டு மாசிமீ 12உ சுக்கிரவாரதினம் தனது ஆன்மார்த்தமாகிய படம்பக்க நாதரது திருவடிநீழலைச் சேர்ந்தனர். இவரியற்றியுள்ள செய்யுள் நடை, வசனநடை நூல்கள் பலவுள. அவற்றை ஒவ்வொன்றாக இனி வெளியிட உத்தேசங் கொண்டுள்ளேன். அவற்றில் முக்கியமானவைகளி னட்டவணையொன்று சேர்த்திருக்கின்றனன், இவரது இரண்டாம் மனைவியாரும் ஜீவந்தரா யடியேனிட மிருக்கின்றனர். இவருடைய சரித்திர விரிவு பின்னர் தனிப்புத்தகமாக அச்சிட்டு வெளிப்படுத்தப்படும்.

வேண்டுகோள்

இவரது புகழும், நூல்களும், சரித்திரமும் நீடூழி நிலவுமாறு எல்லாம் வல்ல சித்தராய பரசிவப் பிரபுகருணை புரிவாராக. சுபம்! சுபம்!! சுபம்!!!

"வேலாயுத ஆச்சிரமம்"<br>சிறுகடல் கிராமம்<br>தொழுவூர் போஸ்ட்<br>1912ஆண்டு ஜனவரி 1ௗ

இப்படிக்கு,<br>அடியார்க்கடியன்,<br>ஐ தொழுவூர் - வே. திருநாகேசுவரன்.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

விருத்தாசலம் - தியாகராயக்கவிராயரவர்கள்

புத்திரரும்

மதராஸ் அகவுண்டாண்ட் ஜெனரல் ஆபீஸ் பென்ஷனருமாகிய

விருத்தாசலம் - கலியாணசுந்தரம் பிள்ளை-B. A.

அவர்களாற் சொல்லப்பட்டது.

அறுசீர்க்கழி - நெடிலடியாசிரிய விருத்தம்.

மூலனூர்மொழி சாகாக்கலையுலகோ ரறிந்து முதற்கேடுநீக்கிக்
காலனூர்தமை வெல்வான்கட்டுரைக ளுரைத்தாண்ட கருணைவாரி
வேலனு ரருள்பெற்று விமலனூர்பதத்துணையால் வினைகளோட்டுஞ்
சீலனாருளொளிசேர் செல்வனு ரிராமலிங்கச் செம்மல்சீர்த்தி. (க)

எல்லோரு மறிந்துய்யத் தோத்திரப்பாக்களிற் கூறியிசைகொண்டானு
வல்லோருமிடியரவங் கௌரவமென நடுங்கும்வகை செய்வல்லோன்
பல்லோரும்புகழ் தொழுவூர்ப்பதி வருபண்பனைத்து மொருபடிவங்கொண்ட
நல்லோன் வேலாயுதப்பேர்கொண்டு தலைமைப்புலமை நடத்தினனே.

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்கள்

இயற்றிய

பன்னிருசீர்க்கழி நெடில்விருத்தம்.

பாற்கடலைக் கடைந்தெடுத்த வமுதத்தி னுஞ்சுவையே பயந்த சொற்கள்
பதிந்தகவி னிறைந்துவருட் பெருஞ்சோதி யிற்றிளைக்கும் பயனை யூட்டும்
நாற்கவிசேர் திருவருட்பா வருளியநம் மிராமலிங்க ஞான வள்ளல
நற்கீர்த்தி யினைப்பாடிக் கொண்டாடி யுயர்கருணை நண்ணற் கேற்ப
நூற்புலமை வடமொழிதென் மொழியிரண்டி னுஞ்சூழ்ந்த நுண்மைவாய்ந்த
நுகர்வயற்சூழ் தொழுவூர்வே லாயுதநா வலர்பெருமா னுவன்ற போதச்
சூற்புயலை நிகர்த்தசந் நிதிமுறையை யியன்றனயன் றுலங்க வச்சிற்
றோன்றிடவேசெய்தளித்தான் றிருநாகேச்சுரப்பெயரான் றூய்மையோனே.

---

# பதிகம்.

நேரிசை யாசிரியப்பா.

பார்மலிபத்தர் பணிந்திடும் பரிசாய்த்
"தொண்டர்சீர்பரவுவார்" தோன்றிடுந் தொன்மைத்
தொண்டநன்னாடதிற் றொழுவூர் மேய
வேளாண்குலத்து வேளென வீறிய

## பதிகம்.

செங்கல்வராயச் செம்மறனக்குச்
சேயெனப் பெயரிய சேமச்சீர்த்தியான்
"மகன்றந்தைக் காற்றுமுதவியிவன் றந்தை
யென்னோற்றான்கொல் "லென்னுஞ் சொல்லைத்
திடம்பெறத் தெரித்த திறமையாளன்
நற்குணம்பழுத்த சிற்குணவறிவன்
"இன்னாசெய்தாரை யொறுத்தலவர்நாண
நன்னயஞ்செய்துவிட லெனுந்தமிழ்மறை
நடைபெறநடந்து நன்னயம் நாட்டினோன்
ஒற்றியூர்மேய வுத்தமன் பத்தியால்
வித்தகம்பொலிந்த சித்திரக்கவிஞன்
சைவ சித்தாந்தத் தெய்வக்கொள்கையன்
மெய்யையளித்தென் மெய்க்குருவானோன்
சமரசவேத சன்மார்க்க சங்கத்துப்
பெரும்புலவரெலாம் விரும்பியளித்த
பட்டப்பெயராய்ப் பாரினிற் பரவிய
"உபயகலாநிதி" சபையகலாநிதி
'வேலாயுதனும்" மேலாம்புலவன்
தீராவார்வத் தேசிகராயன்
முத்தியுஞ் சித்தியும் மூவாவியக்தியும்
மெய்மையிற் பெற்றுமேவிடலுறுதி
யாமெனத்தெளித்த வருட்குருவானோன்
எந்தை தந்தை தந்தைக்கு முந்தை
ஒழிவிலொடுக்கத் தோங்கிய வறிவோன்
மாயாப்பிறவி மயக்க மறுத்தோன்
மண்ணினிற்றிண்மை வலித்தோன்மாசறு
"சிதம்பரம்" வந்ததிறம் பெறுமுனிவன்
"அருட்பிரகாசன் பொருட்கருவூலன்
இருளட்டதேசன் மருளட்டகாசன்"
"இராமலிங்க" னிணையடிமறவாப்
பத்தியிற்கனிந்து பாடினன் புகழைச்
"சற்குருதுதிநற் பள்ளியெழுச்சி
பெற்றிடு நமஸ்ஸங்கீர்த்தனஞ் சரணம்
அருணும மந்திராமிர்தமொடு மளப்பருந்
திவ்வியநாமாமிர்தமே சீர்சால்
போற்றி ஸங்கீர்த்தனம் பொருவில் முறையீடு
குறைபிரத்தலற் பித்தலிருங்கழற் சந்நிதி
முறையுறை விண்ணப்பமாமெழில் மங்கல
வாழ்த்தே வஞ்சித்துறைகணேர்படு
மலங்கார மடைவுடன் சந்நிதிமுறையா
யூழி யூழி யுயர்ந்தே
யுலகமோம்புகவே யுலகமோம்புகவே.

---

இப்பதிகச் செய்யுள் செய்தான் இந்நூலாசிரியன் மூத்தமகன் திருநா கேசுவர னென்றறிக.

சிவமயம்.

கணபதிதுணை.

அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை.



திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

# சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகள்

# சந்நிதிமுறை.



## சற்குருதுதிகள்.

திருச்சிற்றம்பலம்.

சோமசிங்காரநம தூயசந்தோடநம
சூழுறும்வேதமுடி சூடரும்பாதநம
காமசங்காரநம காதலன்பாருமவர்
காதலின்காறுமமர் காசினன்பாதநம
நாமமங்கோதினர்க ளாசமின்றாகியுய
நாடரும்வீடுதரு ஞானசெம்பாதநம
ராமிபங்காளநம நாணாயும்வாறுவரு
ராமலிங்காயநம ராமலிங்காயநம.

பராபரங்கோதகனா மநாமயம்போதநிலை
பகாநலம்வாதமறு சுகோதயம்பாதிதமி
னிராமயங்காரகம திலாதசஞ்சீவிதந
னிராசைகொண்டாருடைய நிகேதனஞ்சூதமுறல்

வராதவின்பாரவெனை முனனில்வந்தேயருளி
மகாபலஞ்சேரவருள் விராவுசெப்பாதநம
விராமலிந்தார்மனதி னிராதசந்தோடநம
விராமலிங்காயநம விராமலிங்காயநம.

இராமலிங்கச்சுடரேற்றுபுநோய்செயென்றென்மைமல
இராமலிங்கண்ணியபுன்மையுளம்விளக்கூவிடும்பை
இராமலிங்கன்னெடுத்தாட்படுத்தாண்டவெழிற்கருணை
இராமலிங்கக்குருராயனற்பொன்னடியென்முடியே.

திருச்சிற்றம்பலம்.

குருதுதிமுற்றிற்று.

---

திருவருட்பிரகாசனார்

# திருப்பள்ளியெழுச்சி.

திருச்சிற்றம்பலம்.

போற்றிமாலயன்மறைபுகலுறும்புகலே
புண்ணியத்தவங்கள்செய்புண்ணியப்பயனே
தோற்றருஞ்சிவபரஞ்சோதியேசுடரே
சுடரவன்குணகடற்றோன்றினனரசே
மாற்றரும்வல்லிருள்புலர்ந்ததுகழல்கள்
வழிபடுந்தொண்டர்கள்வாய்தலினின்று
ரீற்றெருடுமுதலிலாவருட்பிரகாச
வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (க)

ஆணவவல்லிருட்படலங்கள்கிழிய
வைந்தொழிற்கிரணசத்திகடமைவிரித்து
மாணுறுதிருவருட்கதிரவனன்பாம்
வாரிவந்தெனக்குணகடலகட்டெழுந்து
காணுறஞாயிறுமெழுந்ததிங்கெங்கள்
கலியிருளொதுங்கிடக்கற்பகக்கனியே
யேணுடையொற்றியெமருட்பிரகாச
வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௨)

கேவலத்தனியிருள்கெடவொருசகலக்
    கிளர்மதிமழுங்கவெவ்விடயஞானப்பந்
தாவுறமுழுதுணர்கதிர்புடைபரப்பித்
    தண்ணருட்பானுவிற்சண்டவெங்கிரணன்
பூவுறுமுயிர்த்தொகையின்புறவுதயம்
    பொருந்தினன்புள்ளலம்புற்றனபுலரி
யேவருந்தொழவந்தாரருட்பிரகாச
    வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௩)

மலவிருளறவருமாண்புமுன்னுணர்த்தும்
    வண்கொடித்தேவரினண்புறுகோழி
நிலவியகுருகினமலம்பினசங்க
    நீடுநின்றார்த்தனசின்னமுமுழங்கும்
குலவடித்தொழும்பர்கள்குரைகழற்பணிகள்
    குயிற்றுநர்குறிவழிநின்றனர்வேட்டங்
கிலகருட்பிரகாசவெழிற்றணிகேச
    வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௪)

முதனடுமுடிவொன்றுமின்றியாவையுமா
    முத்தர்கண்முத்தனேமுனிவனேமூவா
துதிபுனைசேவடிவிளக்கிடுந்தொண்டர்
    திருவருட்குறிப்பினைக்குறித்தனர்நின்றார்
சுதமறுபுலிமுனிபரமுனியேத்தத்
    தூயபொன்னம்பலந்துலங்குறநடித்தங்
கிதமுயிர்க்கினிதருளருட்பிரகாச
    வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௫)

பாலனமென்மொழிப்பாவையுநீயும்
    பரிந்தன்பர்பழங்குடிற்கெழுந்தருள்புரியச்
சாலவுந்தக்கதிக்காலம்வெண்மதியுஞ்
    சாய்ந்ததுசங்கற்பத்தாரகைதொலைந்த
கோலமார்குணதிசைவெளுத்ததுமுக்கட்
    குருமணியேயெங்கள்கோமளக்கொழுந்தே
யேலவெனுடையருட்பிரகாச
    வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௬)

ஒற்றியூர்மேவியவொளிமணிவண்ணு
 வும்பர்கோனுன்முகன்வம்புலாந்துளவக்
கொற்றவன்முன்னவாமுனிவரர்க்கியங்கள்
 கொண்டுநின்றூர்மறைக்குலமெழுந்தார்த்த
பற்றிலர்க்கருள்பராபரவெனையுடைய
 பசுபதிபழம்பொருள்பாவநாசமன்
றிற்றனிநடந்தருமருட்பிரகாச
 வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (எ)

பிணக்குறுமதிபெறுகணக்கறுசமயப்
 பித்துறுமாலைக்கட்சிற்றெழையோர்கள்
வணக்குறுசிறுதலைவாயினூன்மனைதோ
 றுழலுபுசிறுதேவர்வழங்குறுபயிக்க
மணக்குறுபொருளெனக்கொள்கின்றூரடியோம்
 வள்ளனின்மலர்க்கழல்வான்பதம்பெறுவா
னிணக்குறன்பாம்பலியருளருட்பிரகாச
 வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (அ)

காலனுருயிர்கொளநீட்டியபதத்தோய்
 கண்ணகன்ஞாலமேற்காதலித்தவர்கள்
பாலனுரன்புண்டபழமறையேத்தப்
 பண்ணவர்சிரந்தொடுவண்ணவான்கழல்கள்
ஞாலமாமகண்முடிபுனைந்திடச்சூட்டி
 நாயடியோங்களுக்கருள்புரிநயப்பான்
ஏலவார்குழலியோடருட்பிரகாச
 வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (கூ)

மட்டவிழ்குழலியோர்பங்குடைத்தில்லை
 வரதனேயொற்றிவாழ்மாணிக்கமலையே
வட்டவார்சடைமிசைமதிக்கண்ணிவைத்த
 மைந்தனேமுக்கணமாசிலாமணியே
பட்டனேயென்னைப்பரிந்துவந்தாண்ட
 பனவனேநவநிலைகடந்தருள்சைவ
வட்டமூர்த்தியாமருட்பிரகாச
 வாரமுதேபள்ளியெழுந்தருளாயே. (கo)

மோனந்தவாதமுனிவர்கான்முழைகள்
முற்றுணவற்றுமேற்புற்றெழுந்தோங்கக்
கானுந்தநின்றனர்கண்டனர்க்காணொங்
கடைச்சிறுநாய்க்கடைக்குங்கடையானெம்
பானந்தல்கேடிலாப்பாதமண்டடவய்
பரிந்தருள்கொழித்துவந்திருந்தருடில்லை
யானந்தநாடனேயருட்பிரகாச
வாரமுதேபள்ளியெழுந்தருளாயே. (கக)

மந்திரங்கலைபதமெழுத்துவான்புவன
மண்டியகருவிகண்முற்றும்போய்நின்ற
சுந்தரச்சேவடியிருநிலந்தோயத்
தூயமாதவங்கள்செய்தொழும்புகொண்டருள்வான்
வந்தமாணிடமணியொற்றியூரமர்ந்த
வரதமாலயன்சிரமாட்டுருவமல
வந்தமாதியுமிலாவருட்பிரகாச
வாரமுதேபள்ளியெழுந்தருளாயே. (கஉ)

ஏழையேன்செய்பிழையனைத்தையும்பொறுத்தென்
னிடர்ப்பிணிபொருதவென்னெய்ப்பிலாவைப்பே
யூழிவானவர்பதநச்சுறுவண்ண
முயர்பொருள்விரித்தவென்னுயிர்க்குயிரேசீர்
வாழியென்றேத்தவாய்வலிதருள்புரிந்த
மாணிக்கக்கூத்தனேமறையவன்மகவா
ஞழியான்காணருமருட்பிரகாச
வாரமுதேபள்ளியெழுந்தருளாயே. (கங)

மறுத்தவென்பிழைபொறுத்தருளியென்மடமை
வைக்கவுட்பொறுதருள்வாய்மையான்வலிதே
யுறத்தகுபிரணவத்துண்மையைவிரிக்க
வுவந்தவவொற்றியூருத்தமநாயேன்
பெறத்தகுபேறினியளித்திடநின்ற
பெருங்கருணைக்கடலேமுக்கண்மூர்த்தி
யறத்தனிநாயகவருட்பிரகாச
வாரமுதேபள்ளியெழுந்தருளாயே. (கச)

நினைப்பொடுமறப்பெனுமுடுத்திகழ்கங்கு
னிறைந்தமாயாவுடற்பிரவஞ்சத்துள்ளே
தனித்திகழ்பழம்பொருள்விளக்கியவடியார்
தத்துவவுளக்கடற்சாந்தமாமலையே
னணித்திகழ்கழற்கதிருதயமாகுறநா
ணயந்தனர்நின்றனர் ஞாயிறும்வந்தா
னெனைத்தனியாளுடையருட்பிரகாச
வெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார் திருப்பள்ளியெழுச்சி
முற்றிற்று.

---

## திருவருட்பிரகாசனார்
# நமஸ்ஸங்கீர்த்தனம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தகுமாரணவாகமசிரத்தொளியேவெளியேயென
தியக்கறவாயுரைநாடருசிறப்பினோர்மானிடநாடக
வுருத்திகழ்காரணநேயர்களுளத்தனியாலயமேவிய
வுருக்கவலாயறியாவறிவொளிக்குவலாயெனையாளென
இருத்தியவானவரேமுதலெவர்க்குமொணுவியலார்பணி
யெனக்கெனவேபொதுவோவுறவிசைத்திடுபாதநமோநம
அருத்தியினோர்மடவாண்மகிழுறத்தனிமால்விடையாய்நம
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௧)

வழக்கர்களாமறுவோரவர்மருட்டிகழ்பாசகவாசக
மதித்தவமேபெறுநாள்கழிவழக்கறவேதனதாளிணை
முழக்குறுசிரதுவேபுனைமுழுத்தவரேவலையேகித
முயற்றுறவோர்மதியேவரமுளைத்தவெனுதநமோநம
விழுக்கறுகாரணகாரியமிலைசக்குறியாவடிவாயுல
கெவைக்குமொர்தாயகமாகியவிணைப்பததாமரைநாண்மலர்
அழுக்கடைபேதையெனோர்முடியமைத்தருளுமெதோவினம்
அருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௨)

மலத்துழலோர்சிறுகீடமெனத்தகுபேதையைவாவென
மயக்கறுசீரடியேபுனைவளப்பணியாளர்குழூஉவிடை
விலக்கறவேயிருநாமுனைவிடுக்கிலமேலினிவீணினின்
மிகுத்திலையேனிலைவாயெனவிதித்தவனேவினையேனுள
நலத்தனியாலயனேமறைநவிற்றருசோதியெனுயக
நகக்கொடிமாதரசாரணிநயத்தணிபாதிதயாநிதி
அலக்கணெலாமறுமாறருளறத்தனிவானவனேநம
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௩)

குணக்கிதமேல்குடபாலிதுவெனத்தெரியேனொருநாயது
குணத்தினுமேகடையாகியவெனக்கிணையேனையுமோர்பொருள்
கணக்குசெய்வாய்புலவோரொடுகருத்தறவேநினையேநினை
கவற்றிருவாளர்கண்ஞானியர்கணத்திடையாயவர்தாமெண
இணக்குறுசீரிதுதானுறவிசைத்தருளேதெதுதானெனி
லெணிக்குணிமாறுளதோவுனதியற்புகழோபெரிதாரிய
அணக்குறுவார்சுரராதியரருட்கடைசேரியநெடு
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௪)

எனைத்தெரியேனெனையோர்பொருளெனக்கொடுமாலலர்மேலய
னெனப்படுவார்பெரியாரவரியற்கரிதாகியசீரடி
தனித்துணையேயுறுமாரியர்தவத்துறுவாயெனவேவலி
தவக்கனியேயுணரேனினநினற்றிருவாரருளோரியல்
மணித்தருள்போலியனுதலின்மதித்தறியேனருள்வாய்மையை
மயக்குறுவேனவமேயினிவழக்குளவோசிவனேசிவ
அனித்தமெலாமறபாணிடபணித்தவனேயருணாசல
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௫)

வடித்தனிவேல்கொடுமாமலைமதத்தனிமாமுகனுசற
மலைத்தவனேமலையாளர்கள்வளர்த்தவளாசையனேகுக
குடித்தெழுவாரிநிறைதருள்குளித்தவமாமுனியாரிய
குணக்கடலேகொடியேனொருகுடிக்கிறையேகுரவாவெனப்
படித்திலனேரினிஞோர்புகழ்படிற்றுழல்வேனவமேயெனில்
பகட்டிறையாள்வரினுருயிர்பதைத்திடுமேயெனநோவதென்
அடிச்சிறுநாயனையேனினியருட்படியாகபராபர
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௬)

படைத்திடவானறியாநெடுமுடிச்சடைமேலரவோடொளி
பனிச்சிறுமாமதிபாதியைபழிப்பறவேபுனைவாயெனில்
விடைத்தனிகேதனனேயெனைமிறைப்படுபேதையெனாவெண்ணி
விடப்படுமோவடிநீழலிலொதுக்கிடமேபெறுமேபல
கடைப்படுவேனிசையேனுடல்கதிக்கிசைவாய்சிலவோர்பகல்
கருத்துனினாலுமதாவகைகணித்தறிவாயிசையாதன
அடைத்திடலாரருளாவணவமைத்தருளாரியநாயக
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (எ)

மறத்தொழிலோவருமாமதில்வளர்த்தெழுதீயிடைவேவுற
மதித்தொருமூவரையேவல்கொள்வளத்தவனேமலையாண்மகிழ்
திறத்தவனேகருணாலயதிகைப்பறவானிழன்மேவுபு
திருத்தவர்நால்வர்களாசறதிருச்செவியாரவுணாவருள்
குறக்கொடிமாமவிமாசலகுலத்திறையோர்மருகாவென
குடிக்கொருமாமுதலேயெமுள்குடிக்கொளுவாய்சிவதாசிவ
அறத்தனிநாததிலாபுரியருட்பொதுவாளநமோநம
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (அ)

கயற்கடுவேல்பழிநீல்விழிகனித்துவர்வாய்மடவார்முலை
கலிற்றலைநோவுறவேவிடிபடப்படுமோவினையேல்வரு
துயர்க்குளெலாமரசாகியசொலப்படுசாவெனுமோர்பகை
துணுக்குறவேவருநாளினிற்றுணைப்படுவாருளரோபுவி
யியற்பலபேதமெலாமெணியிடர்ப்படுவேனலதாசற
விணைப்பருசீரடியோர்புகழிணைத்தொழுமாறெதுவோமல
ரயற்கருமாமறையோடுநலரிக்கரியாயெளியாயெமக்
கருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௯)

விரித்தனைமாமறையாகமம்விதித்தனையாருயிர்யாவையு
மிகுத்துயுமாறருளாயினும்விழற்கொடியேனுணரேனதைத்
திரித்தனனாய்மனமோடுபுதெருக்கடையேயுழல்வேனொரு
சிறுத்தபுலாதிகளேயுறச்சிரித்தகுபேதையெனாயிடில்
தரித்தனையேமதியோடுபுல்சலத்தவமாமகளோடுறத்
தவப்பயனேதமியோர்பிழைதனைக்குறியேனுடையாய்சிவ
அருட்டுறையாயறவாழியவறத்தனிநாயகிநாயக
வருட்பிரகாசநமோநமவருட்பிரகாசநமோநம. (௰)

வேறு.

பிணிப்புறுமூலவாணவப்பெயர்ப்புறவேதமோதுபு
　　பிணக்குறுபேதவாதியர்பிதற்றநாடியேயுழல்
வணத்தெனைநேடிவாவெனவலித்தெனதாவியோடுடல்
　　மதித்திடுகாயம்யாவையும்வசப்படவேகொளாதிய
கணக்கறுசிவபேதமுமிணக்குறுபாததாமரை
　　கடைப்படுபேதையோர்முடிகருத்தனுமாகவேபுனை
வணித்தருளாதியோநமவரட்டனையாளுவாய்நம
　　வருட்பிரகாசனேநமவருட்பிரகாசனேநம. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார் நமஸ்ஸங்கீர்த்தனம்
முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

## திருவருட்பிரகாசனார்

சரணமஞ்சரி.

சாமகண்டாயசரணஞ்சாதுசந்தானசரணந்
　　தாவிலன்பாகுமவர்தஞ்சார்பினின்றுடிசரணம்
காமகண்டாயசரணங்காலசண்டாயசரணுங்
　　காளகண்டாயசரணங்காளிகண்டாயசரணம்
வாமசிங்காரிமகிழுந்தாமமந்தாரசரணம்
　　மாமசங்காரசரணமீமசஞ்சாரசரணம்
நாமமந்த்ரேசசரணம்ராமலிங்கேசசரணம்
　　ஞானபண்டிதசரணம்நாதமுண்டீசசரணம். (௧)

மாரசந்தாபசரணம்மாதுபங்காளசரணம்
　　மாயசம்பேதிசரணம்மாலெனம்பேவிசரணம்
காரணங்காதிசரணங்காலமுந்தேகசரணங்
　　காயமின்றுதிசரணங்காணரும்போதசரணம்
ஆரணந்தேடிசரணமாகமங்கூறிசரண
　　மாசரும்வேதிசரணமாவிசஞ்சீவிசரணம்
நாரமுஞ்சூடிசரணநாசமுங்கீறிசரணம்
　　ராமலிங்காயசரணம்ஞானபண்டிதசரணம். (௨)

ஆடுறும்பாதசரணமாதிகங்காளசரண
　　மாலினன்றேதுமுடிபின்சோதியெந்தாதைசரணம்
வாடுறும்போதினெனையும்வாவெனுஞ்சீதவருளின்
　　வாறெனென்றேதவடியன்பாடுறும்பாடல்பரிசின்
ஈடரும்பாதசரணமேதாநன்றுதிசரண
　　மேஷமூயென்மோகசரணமேரகம்வாசசரணம்
நாடரும்பீடிசரணநாரிசிங்காரசரணம்
　　ராமலிங்காயசரணம் ஞானபண்டிதசரணம். (௩)

மானுறுங்கோலசரணம்மானுறுஞ்சீலசரணம்
　　வாதறும்போதமதனின்வாழுறும்பாதசரணம்
ஊனரும்யோகநிலையுந்தானரும்பாதசரண
　　மூசனின்றுடுமனைதினாடருஞ்சீரசரணம்
வானறுங்காலுமறலுந்தீமனுப்போதுமுயிரும்
　　மாறரும்பாலுமதியுமானவெண்மேடகசரணம்
நானறுங்காலநணுகுநானுறும்வேளையகலும்
　　ராமலிங்காயசரணம் ஞானபண்டிதசரணம். (௪)

ஈனசஞ்சாரமதினின்றானசெஞ்சோரியுடலந்
　　தானரும்பேறதெனுமென்னினைபுன்சோகமதியின்
றேநலிந்தோடவருளின்வானரும்யாறுபுவியின்
　　பானறுங்காலினுறலின்யானெனும்போதமுடிவின்
றூநறுஞ்சீதசரணம்யானணிந்தோதமுடியின்
　　மேனடும்போதுமரணந்தூரநின்றேடமிகவும்
நானிலங்காணவெளியின்மானிடஞ்சூடுநிபுண
　　ராமலிங்காயசரணம் ஞானகம்பீரசரணம். (௫)

கூறருந்தியாகசரணங்கோலமன்றுடிசரணங்
　　கோதைசெம்பாதிசரணங்கூடலின்சீலசரணம்
வாறரும்போகசரணம்மாணிசன்மானசரணம்
　　மாலினின்றேடிசரணமாசருஞ்சோதிசரணம்
பாறுமூன்பாடநடவும்பாவலங்காரசரணம்
　　பாடரும்பாடசரணம்பாலினின்றேனசரணம்
நாறுபுன்றேகமுயிருநாடுசெந்தாதுகவரும்
　　ராமலிங்காயசரணம் ஞானகம்பீரசரணம். (௬)

சோமசிங்காரசரணந்தோழவென்றுயசரணந்
தூயசெஞ்சோதிசரணஞ்சோதிசெஞ்சோதிசரணம்
மாமனென்றேடிசரணம்வாதிக்ன்றுடிசரணம்
மாலயன்றேடிசரணம்மாமகஞ்சாடிசரணம்
தாமவண்டாரசரணஞ்சாதமுஞ்சூதமுறலுந்
தானறும்வாழ்வுதருமென்சாமியென்சாமிசரணம்
நாமமந்த்ரேசசரணம்நாடருந்தேசசரணம்
ராமலிங்கேசசரணம் ஞானசப்பிரேசசரணம். (எ)

தாயகஞ்சாமிநினதின்றுவரும்பாதமலரென்
றுவக்கொண்டார்கள்பணியுந்தாமவண்டாயசரணம்
சாயகந்தூயவரியென்றேபுரஞ்சாடுநகையின்
பாவகம்பேசுமதுவுஞ்சாருமென்போதவனவன்
றேயகம்வாடுமளியன்பாலுமிங்கேதுபுரியும்
வாறமெதென்றுதைசரணமீறில்சந்தோடசரணம்
நாயகம்வேறதுளதென்றோர்விலன்காணிசரணம்
ராமலிங்காயசரணம் ஞானபண்டிதசரணம். (அ)

மூலமந்த்ராயசரணமோடியெண்டோளியுருகும்
மோகடம்பாயசரணம்மோதகந்தாயசரணம்
சீலதந்த்ராயசரணந்தேஜமுண்டாயசரணம்
தேவசிங்காயசரணம்சீதசிந்தாயவறிவின்
பாலசந்த்ராயசரணம்பாவசம்வாயிசரணம்
பாகசம்யாமசரணம்பாபசங்காரசரணம்
ஞாலமிந்த்ராதிபரவும்நாகபந்தாயசரணம்
ராமலிங்காயசரணம் ஞானசம்வேதசரணம். (௯)

பாசபஞ்சாரவரமும்பாறுமஞ்சாயதொழிலும்
பாரில்விஞ்சாதவணமுன்பாடுகின்றூர்களெவரும்
மோசநந்தானதுறவந்தாளுமென்சாமிசரண
மூடனென்கோதுமுழுதுஞ்சாடுசெம்பாதசரணம்
வாசகம்போயவொருநன்மாதுரந்தோயுதிபுண
மாநடந்தேருமுகளவாரிசப்போதசரச
ராஜசங்கூடியொளிரும்தேவநந்தேவசரணம்
ராமலிங்காயசரணம் ராமலிங்காயசரணம். (௰)

நாகர்மண்டேயர்கனகநாடர்வந்தேதமகல
நாடிநின்றூர்கள்பணியுநாசநஞ்சாதிசரணம்
மோகமங்காருமதியின்பாலகன்றேயுநிகழும்
பூரணன்சோதியெனவும்மூசரும்பேரசரணம்
சோகமிங்கேதமௌனநின்றூறும்வாறதறவின்
றவினைந்தோடிமுடியின்சூடுறும்பாதசரணம்
நாகமின்றிமைமுழுதும்பாடவென்றுலதருளும்
ராமலிங்காயசரணம் ராமலிங்காயசரணம். (௩௧)

மாடகம்போகமனையும்மாயமங்கேதமுடிவின்
மாசதின்றுயதிறைவன்மாணுறும்பாதமெனமன்
வாடகந்தேடியுழலும்வாரநெஞ்சோடிபுகுதும்
மாதிடங்கோளிசரணம்வாதிடுங்காளிமயலும்
நாடகந்தூயவெளிநின்றுடிசங்கேதசமயம்
நாடரும்வேதமுடியின்பீடுறும்பீடசரணம்
ஏடகங்காழிவடலுமேரகம்வேதகிரியு
மேமமன்றேடுமருவுமீசநந்நீசசரணம் (௩௨)

பாதமந்தாரமருதஞ்சோகபுன்னைகவகுளம்
பாடலங்கோளிபனசந்தாலமஞ்சாடிபடிரம்
சூதவங்கோலதருமஞ்சாகசஞ்சாளிவிரவுஞ்
சூழனந்தாதிபுரியின்மாதுசெம்பாதிசரணம்
கேதசந்தேகதிரிபும்மூடமும்வாதுமொருவும்
கேடரும்போதமருளுங்கேள்வியங்காதிசரணம்
நாதமும்வேதமுடிவுஞ்ஞானமும்யோகநிலையு
நானதும்போயவொருநன்னையகந்தூயசரணம். (௩௩)

ஞானபண்டிதசரணநாகர்தம்வாழ்வுசரணம்
நாதம்விந்தோடுகலையென்னுடைகன்றுடிசரணம்
மோனசிந்தாதிசரணமூவலின்றுதிசரண
மோனிசிந்தாயசரணமூதகண்டாயசரணம்
வானசிந்தாயசரணம்மாகதம்பாயசரணம்
மாயுரம்வீரசரணம்வாலைதன்பாலசரணம்
தீனபந்தாதிசரணஞ்சேவலந்தோகையுயருஞ்
சீரசெந்தூரசரணந்தேவநந்தேவசரணம். (௩௪)

வேறு.

சிந்தாமணியேசரணஞ்சரணந்திருவேமருவேசரணஞ்சரணம்
கந்தாகனியேசரணஞ்சரணங்கதியேமதியேசரணஞ்சரணம்
எந்தாயிறையேசரணஞ்சரணமினியாய்தனியாய்சரணஞ்சரணம்
முந்தாமுறையேசரணஞ்சரணமுனியேகனியேசரணஞ்சரணம்.

வேறு.

வட்டமானவம்புமுலையுமிட்டசோதிபைம்பொனணியும்
வைச்சகாதிலங்குகுழையும்மட்டுலாவுகொந்தளகமும்
ஒட்டியாணபந்தவிடையுமுற்றதாமசந்தமணியு
முத்தரீயதொங்கலதுவுமுச்சிமேவுமந்தபதமும்
சிட்டரானவன்பருளமுமொக்கவாடமுன்புபுரியு
மத்ததாளமங்கைமகிழுஞ்சித்தவேடமொன்றிசரணம்
நட்டுளார்கணம்பசரணம்நச்சுநாயெனெஞ்சில்சரண
நட்டராமலிங்கசரணநட்டமாடுசெம்புசரணம். (௰௬)

சுட்டிலாதவெந்தைசரணந்துக்கமானசிந்திசரணந்
தொக்கநேயமைந்தர்மனமுஞ்சுத்தமேவதவங்கமுடியும்
மட்டுலாவுகஞ்சசரணம்வைத்தெனுசுபந்தவிபுலம்
வைத்திடாதிகழ்ந்துநிதமுமத்தனேனைவந்துபருவம்
பட்டகாலமிங்குசிறிதும்பற்றுறாதுபண்புபலவும்
பக்ஷமோடுமின்றுபகலின்பக்கமேபுரிந்துவலியும்
அட்டமானவிம்பசரணமத்தராமலிங்கசரண
மத்ததாளநங்கைமகிழுமற்புதாவகண்டசரணம். (௰௭)

வேறு.

சிரித்தெயில்களெரியும்படிக்கவுரைமலையுந்
தெரித்தகிலேயெனமுன்வளைத்தகரசரணம்
விரித்தமுதுமறையும்படிக்கரியபுகழ்மென்
பதத்தையொருகுறளின்வெரித்தலையினுலவும்
பொருத்தமதுபுரியுங்கருத்தசயசரணம்
புனிற்றுமறிவிழியங்கொருத்தசயசரணம்
நெரித்துவிறலவுணன்வருத்தமுறநிறுவு
நிருத்தபதசரணம்நிருத்தசயசரணம். (௰௮)

வடித்தபழமறையின்சிரத்தினடனவிலும்
விருத்தசயசரணம்வரித்தவுலகெவையும்
யடித்தபுகழ்முழுதுந்துதிக்கவரமுதவும்
பழுத்ததமிழ்விரவும்பயத்தமுலையொருபெண்
கொடிக்கினியசரணங்கொழுத்தமலர்புனையுங்
குடிக்குமொருமுதலென்குலத்தொடனைமுழுதும்
நடித்தகழன்முறிகொண்டெழிற்கனகசபையி
னடித்தபதசரணம்நடத்தசயசரணம். (௰௬)

கனத்ததனசிவசங்கரிக்குமகிழ்வரவெங்
கணத்தொகுதியுடனம்பலத்திடைபணியுஞ்
சினப்புலியினடிசெம்மனத்தவனுமுருகுஞ்
சிறப்பினியறகுசெஞ்சணுக்குசணுசணுதந்
தனத்ததனதனதந்தனத்ததனதனதந்
தகுக்குதகுதகுதிந்திமித்திமிதிமிதிதிந்
தினச்செகுகுசெகுசெஞ்செணுக்குசெணுவெனமுன்
றிருத்தநடநவிலும்பதத்தசயசரணம். (௨௰)

வேறு.

தேடியவேதாதருவின்கிழவன்சேயிதழ்மேலார்மகளின்கொழுநன்
றேவருநாளாமறையும்புகழுஞ்சேவகமூவாவொருவம்பலநின்
றேடியல்பூவார்குழலின்விழிசெஞ்சேலதுவோடாவுகளின்பவெள
மீடறமீதேபெருகும்படியன்றேவருமாராவகையின்முழுகும்
தாடனதாதாதனனந்தனனந்தாதகுதீதீசெகுசெஞ்செகுசெந்
தாதிமிசேசேதகுதந்தகுதந்தானனதாஜதனனந்தனவென்
றாடியபாதாசரணஞ்சரணமாரியநாதாசரணஞ்சரண
மாகமபோதாசரணஞ்சரணமாளுடையாதாசரணஞ்சரணம்.

வேறு.

மாயசஞ்சாரசனனம்மரணம்வாதைதவந்தாருநெறியின்றொருவும்
வாய்மையிங்கேழைபெறவுந்திருவும்வாழ்வுதந்தாளினியனும்படிநன்
னேயவன்பானகடலின்முழுகுந்நீததொண்டேசெய்பவர்தங்குழுவி
னீசனென்கோதுகழுவுந்தரமன்றாகவுந்தானதுறவந்தருளும்
ஞாயமின்றேதுமறியன்பெரியனாதரின்சேதிசிறிதன்றதுவு [வின்
நாளுமங்கோதுமெனதுந்தணவும்போதுமன்றேசொற்றரியும்மென
றாயசங்கேதவுளவிங்கருளும்ராமலிங்காயசரணஞ்சரண
மாதனென்றாதைசரணஞ்சரணமாடுசெம்பாதசரணஞ்சரணம்.

வேறு.

ஒடுநீரொடங்கிகாற்றுசோதியோடிரண்டுசாற்று
　　மோசைவானமண்சுகார்த்தமோனுமாதனென்றுகாட்டு
நீடுநாலிரண்டுநோக்கோலமாயிருந்ததீர்த்த
　　நீலனுசுவந்துசாத்துநேயமாயசம்புபோற்றி
வேடனூனையுண்டவாத்தவேதியாவெனண்டபோற்றி
　　வேதமாசிலம்பபோற்றிவேணிமீதிலப்பபோற்றி
ஆடலேறுகந்தகாட்சியாரியாவெனன்பபோற்றி
　　யாளிராமலிங்கபோற்றியாடுபாதநப்பபோற்றி. (௨௩)

வேறு.

கரைத்தெனுணமூர்ச்சைகருத்திலுதேசநீத்து
　　கணிப்பிலாசாசைவாட்டியிருத்துபாதாயபோற்றி
யுரைத்துநாவாலுமாட்டாப்பெருத்தவானுதிபோற்றி
　　யொருத்தனுயானுமாக்காத்திருத்தசீபாதபோற்றி
யிரைத்தமாவாரிதீர்த்தமிருக்குகோடீரபோற்றி
　　யிசைக்குமாவேதவாக்குவிரித்ததாளாளபோற்றி
நிரைத்தமாயர்சகார்த்தநிறுத்துகோலாயபோற்றி
　　நிருத்தராசாயபோற்றிநிருத்தபாதாயபோற்றி. (௨௪)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனூர் சரணமஞ்சரி
முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

## திருவருட்பிரகாசனூர்

# அருணமந்திராமிர்தம்.

அந்தமாதியுமகன்றருமறையி
　　னமலச்சென்னியுமாகமச்சிரமுஞ்
சந்தமாலயனுதியவானோர்
　　தடங்கொள்சேகரமுந்தடவரிதாய்ச்
சிந்தைமெய்ம்மொழியானுமிங்களிதாய்த்
　　தீயனேற்குவந்தகப்பட்டசெந்தா
ளெந்தையோஞ்சிவஷண்முகசிவவோ
　　மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௧)

பாசம்யாவையுங்கழன்றுபொய்கழுவிப்
பருவெலாங்கெடவென்னுளக்கோயில்
வாசமாகவந்தூட்குடிகொண்ட
வாசநாண்மலர்ப்பாதவண்புகழைப்
பேசமாமறைபெரிதயர்த்திட்ட
பேசுமாறெவன்பேரருட்பிரகாச
வீசவோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (உ)

மூலமாயையிற்றூங்கியவென்னை
முழுதுணர்த்திடக்கெழுமியவுடல
ஞாலம்யாவையும்வைத்தருள்விளக்கு
ஞானமாமயநாண்மலரடிகள்
சீலமார்புகழ்செப்பவர்தருளூந்
தேவர்சிங்கமேதிருவருட்பிரகாச
வேலுமோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௩)

கல்லையுங்கடப்புருதவென்னெஞ்சக்
கருங்கலுங்கனியாய்ப்புலனுகரா
தொல்லைமாய்வுறவிழுங்கியின்புருவா
யுரைக்குந்தோறுமென்னுடலெலாமினிக்குஞ்
செல்வத்தாமரைத்தாண்மலர்க்கெனையுந்
தேர்ந்துகொண்டருள்செய்பருட்பிரகாச
வெல்லையோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௪)

காணுவாரிருகண்களுமனமுங்
கரைந்துதங்களைக்காணிலராக
மாணுலாந்திருவருளினால்விழுங்கிவைத்து
மாசறக்கழுவியின்பூட்டுந்
தாணுவாகியசரணவாரிசமென்
றலைக்குமாமுடியாக்கியவமல
வேணியோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௫)

கண்டகாட்சியுங்காணுறுபொருளுங்
காணுகின்றதுங்காட்டுகின்றதுவுங்
கொண்டமாமறையுபநிடக்கோயில்
கொண்டிருந்ததுங்கொடியனேனுளத்தைப்
பண்டையேவிழுங்குற்றுமீட்டுமிழாப்
பண்புமிக்கதுமாங்கழல்பதித்த
வெண்டங்கோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௬)

இன்னலற்றுயிர்களின்பமாங்காங்கே
யெய்தியெய்துறவதுவதுவாகி
மன்னியோய்வில்லாவான்சுவையமுதாய்
மானிடங்காட்டிவலிதுவுங்தெனக்கே
தன்னிகர்வைப்பிற்கிடைத்திடுசெந்தாட்
டாமரைப்புகழ்சாற்றுமாசாற்றும்
என்னையோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௭)

வானநாடருமைந்தருமோன
வரருநாடருமாண்பதாய்ப்பொதுவின்
ஞானநாடகநவிற்றிமெய்யடியர்
நலங்கொள்சிந்தைப்பூங்கோயில்கொண்டருளு
மானவார்கழற்புகழ்வழிவழுத்த
வந்தகப்பட்டமாநிதிமறைக
வீனுமோஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௮)

பத்தியுண்டுதொண்டானவர்பெரிய
பளகறுக்கவேயருட்கொடிகட்டி
முத்திமாமகள்களிப்புறவாழு
முழுதுமெய்யறிவின்பமாங்கழல்கள்
வைத்துவைத்துளந்தலைவிழியணைக்க
வந்தகப்பட்டவலிதெனக்கந்தோ
வித்திஞேஞ்சிவஷண்முகசிவவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (௯)

வாய்மணக்குறமனமெலாமணக்க
வையம்வானகமற்றுளமணக்கத்
தூய்மணத்தமாமறைமுடிமணக்கத்
தூயவாகமத்தொல்சிரமணக்கத்
தாய்மணக்குறுங்கருணையினுயென்
றலைமணக்குறத்தரித்தபூங்கழல்கள்
எய்மணத்தஷண்முகசிவகுருவோ
மிராமலிங்கவோஞ்சிவாயசற்குருவோம். (ய)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனுர் அருளுடிமந்திராமிர்தம்
முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனுர்

# திவ்வியநாமாமிர்தம்.

---

வேதியோமன்புவிளக்கியகழல்கள்
வீககிமாமறைச்சிலம்பணிந்தொளிரும்
பாதவோம்பரம்பரசிவசிவவோம்
பங்கயத்தனுமங்கைமார்பகத்து
நீதனுந்தொழுநீதவோமெங்க
ணெஞ்சமேவியதஞ்சமோமளவா
வாதியோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (க)

சொல்லினன்முடிவீற்றிருந்தருளுந்
தூயவோம்பரஞ்சோதியோம்நெஞ்சக்
கல்லைமென்கனியாக்கியமூன்று
கண்ணவோமருட்கண்ணவோங்காத
லெல்லையோமெனையாளுடையிராம
லிங்கவோம்பகலிரவொன்றுதானு
மல்லையோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (உ)

பழுத்தமெய்யன்பின்சுவைமுழுதுண்ட
பாதவோம்பசுபதிசிவசிவவோம்
முழுத்தமூடனேனுளங்குடிகொண்ட
மூர்த்தியோமருட்டீர்த்தவோஞ்சிவவோம்
விழுத்தகுந்திருத்தில்லையம்பலத்து
வேதியோமுத்திவித்தகவன்பு
வழுத்தவோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௩)

என்னையின்னிதாயாண்டுகொண்டருளு
மீசவோம்பாசநாசவோஞ்சிவவோம்
முன்னைவல்வினைமுற்றுமோய்வுறவே
யுரைக்குமூர்த்தியோந்தீர்த்தவோஞ்சிவவோம்
தன்னையேநிகருந்தயவுடைய
சம்புராமலிங்கப்பெயர்தரித்த
அன்னையோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௪)

எண்ணுமெண்ணங்களெண்ணியவண்ண
மினிதுணர்ந்தேழையோங்களுக்கருளும்
வண்ணவோமருள்வண்ணசெவ்வண்ண
மாய்வந்தகப்பட்டமாகழன்முடியாப்
பண்ணநல்லருள்பண்ணியவெங்கள்
பண்ணவபழமறைமுழுதேத்து
அண்ணலோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௫)

ஏத்துவாருளத்தின்புருவாகி
யிருக்கும்பாதவோமெங்குலம்விளங்கப்
பார்த்துக்கண்ணருளாலுளம்விளக்கும்
பரமவோம்பழமலப்பிணியவிழ்க்கச்
சோத்தமாலைகளுக்குளங்களிக்குஞ்
சோதியோந்தில்லையாதியோமரவோம்
ஆத்தவோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௬)

முடிவிலன்பினருள்ளப்பூங்கோயின்
முழுமணிச்சுடரோஞ்சிவசிவவோம்
படியிலென்றலைதீட்டியசெந்தாட்
பங்கயப்பரஞ்சோதியோம்நாயேன்
குடியெலாம்விளங்கப்பெருங்கருணை
கொண்டகோலத்துக்குருபரசிவவோம்
அடிகளோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௭)

பொய்யதேமுழுதும்வடிவாகிய
புலையனேன்பொய்ப்புரைமுற்றும்போக்கிய
மெய்யருள்கொழிக்குங்குருராயவோம்
வேதவாகமமோதுசெம்பாதவோம்
பையமானிடங்காட்டியவாளுடைப்
பரமவோம்பரமாபரஞ்சோதியோம்
ஐயவோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௮)

ஞானநாடகங்கட்டியாருயிர்கண்
ஞாலம்யாவையுநடிப்பித்தநலத்து
மோனவார்கழற்பங்கயமுனியோ
முதலுமீறுமிலாதமுதல்வவோ
மீனமேனெஞ்சினென்றும்பிரிந்திடா
வெந்தையோமருட்டந்தையோந்தாயோம்

மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே (௯)

பத்தியூருக்கப்புறம்பதின்காதப்
பரப்புக்கப்புறம்போய்க்குடியிருந்த
மத்தனேன்றலைக்கேவலிதன்று
மலர்க்கழல்வைத்துமன்மெளாங்கழுவச்
சித்தமேகுடிகொண்டருள்செய்த
செல்வமேசிவனேராமலிங்க
அத்தவோமரகரகரசிவவோ
மருட்பிரகாசவோஞ்ஜெயஜெயஜேஜே. (௰)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார் திவ்வியநாமாமிர்தம்
முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

### திருவருட்பிரகாசனார்

# போற்றிஸங்கீர்த்தனம்.

திருத்தகுமார்பனூற்றினிதழ்த்தவிசேறிவாழ்த்த
திதிக்கொருசேயராக்கமதைத்தெறுநாகர்போற்று
மருத்தருபோதுமாற்றியுருத்திகழ்பாதபோற்றி
மறைத்தனிநாதபோற்றிமதிப்பருசோதிபோற்றி
கருத்தருபாசநீக்கிக்கதித்தருநேசபோற்றி
கணக்கறுவாதர்பாழ்த்தகதற்றொழிமாறுகாட்டி
யருத்தியினீசனேற்குணடிப்பணிபோதவாக்கு
மருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (௧)

கலிப்பகைநாசமாக்கக்கடிக்கமழ்பாதபோற்றிக்
கலக்கறவாளுமாக்கிக்கழற்பணியானவாற்றப்
புலப்பகைவீசியேத்துமியற்றருமீசபோற்றி
பொருப்புவிஞணிபாப்பினிசைத்துழல்சேர்வைவாட்டிச்
சலிப்பறுமூவர்காக்கவொருப்படுநீதபோற்றி
சதுர்த்தசலோகமார்த்தவத்தனிநாதபோற்றி
அலக்கணிலாதவாழ்க்கையளித்தருளாதிபோற்றி
அருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (௨)

பயக்குறுமூலநோய்க்குமருத்தெனுமாசில்சீர்த்தி
வழுத்தறியாதவோத்துமருட்கொடுநேடியார்க்கப்
பயிர்ப்பதிலாதுமூத்தபாநக்கவல்சேரிவாழ்க்கை
பசைப்பிலதாகவீழ்த்தவெலுப்படைநாயினேற்றுக்
கயக்குறுவேனெனத்தகடைப்படுபேதையோர்க்கிற்
கழற்கணிதாகுபேற்றையினிப்பெறுநாளெனுக்கு
மயர்ப்பறுசோதிபோற்றியவத்தொழிஞசபோற்றி
அருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (௩)

விதிக்குமுநூறுநாட்டவணைக்களவாதநோச்செய்
தெனக்குயர்பேறதாற்றல்வினைக்கொடுகாலகூற்றுக்
கதத்தினிலேதுநீத்தக்கணத்தினிலோடுகூட்டைக்
கதிக்கினிதாகியேற்றதுணைக்கொளுமாறொரேற்ற

வதித்தனையோர்கொப்பொய்மடப்பிடிபோலியார்க்கு
மயக்குறுபேயனுற்றுமதித்திறமேதுன்சேர்த்தி
யதிற்புகுமாறதாக்கிப்பதப்பணிசானுமாக்க
வருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (ச)

துறைத்துறைநூல்கள்பார்த்துச்சுழற்படுகேடமேய்ப்பத்
துடிப்புறுவேனைநோக்கித்துகட்கெடவாளதாக்கி
மறைச்சிரநேடியாற்றவாற்றுறுமாறுகாட்டி
மயர்ப்பறமாசுபோக்கிவளர்த்தருள்பாதபோற்றி
சிறைப்படுமாயவாழ்க்கைத்திறத்துளமால்வீழ்த்துன்
திருப்பணிசானுமாற்றப்பெறிற்குருநாதபோற்றி
அறத்துறைவாழவாழ்த்துமவர்க்குறவாதிபோற்றி
யருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (ரு)

பழிப்பறுவேதவாக்கினியற்கருவாகிநோக்கு
பவர்க்கறிவாகியோர்க்குமொளித்தனிநாதபோற்றி
யிழுக்குழல்பேதையாத்தபுலைச்சிறுபோதமாற்றி
யிணைப்பருபாதமேத்துமெழிற்பரபோதபோற்றி
விழுத்தொழின்மூவர்போற்றுமுதற்பொருளாதிபோற்றி
விரைக்கழலோதுவார்க்குத்தனித்துணையாதிபோற்றி
யழுக்கடைநாயினேற்குனடிப்பணியாகவார்த்த
வருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (சு)

மலைத்தனிமாதுசேர்த்தவினிப்புடையாதிபோற்
மணிப்பணிசூடிபோற்றிமகத்தொழில்சாடிபோற்றி
சலத்தவமாதுகூர்த்ததனிச்சடையாளபோற்றி
தவத்தர்கள்வாழ்வுபோற்றிசகத்தொருதாதைபோற்றி
சொலைத்திகழ்சூலவேற்கைக்குருச்சுடர்மேவுநோக்கின்
குணக்கடலாதிபோற்றிகுகற்குயராதிபோற்றி
அலைப்படுநீலமார்த்தவணிக்களநாதபோற்றி
அருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (எ)

கனித்தநல்வாரர்வாழ்த்துமரைப்பொருதாளபோற்றி
கலைத்தலைமேவுசேர்த்திகவித்தொளிர்பாதபோற்றி
மனித்தருள்போலிவேற்றுவகைப்புகல்யாதுநோற்பல்
மடக்கொடிபாதிபோற்றிமறைக்குருநாதபோற்றி

துனிக்கிகலாதிபோற்றி துணைத்துணையாதிபோற்றி
சுகக்கடலாதிபோற்றிசொலற்கரிதாதிபோற்றி
அனித்தமிலாதவாற்றலனித்தருளாதிபோற்றி
யருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (அ)

விடைத்தனியேறுசூட்டுவிறற்கொடியாளபோற்றி
மிகுத்துரைகூறுமாந்தர்விடற்கருவாரபோற்றி
கடற்கரிதாகியார்த்தவிடத்துணைவாளபோற்றி
கயற்கணிமாதுசேர்த்ததுணைப்பொருளாதிபோற்றி
மடற்புனைதாமமார்த்தசடைப்பிறையாளபோற்றி
வடற்பதிவாணபோற்றிமனத்துணையாதிபோற்றி
யடற்படைசூலமாக்கொளழற்புனைகோலபோற்றி
யருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி (௯)

படப்புடைவாணபோற்றிபகைப்புரநாசபோற்றி
பணிப்புகழாளரேத்துபகுக்கருசோதிபோற்றி
தடப்புனல்சூடிபோற்றிதவத்துறவாதிபோற்றி
சகத்தொருநாதபோற்றிசகத்திரநாமபோற்றி
வடற்பதிவாசபோற்றிமணிக்கொளியாதிபோற்றி
வழக்கர்கள்காணலாற்றில்வழுத்தருதூயபோற்றி
அடற்கருகாலனாக்கமழித்தருள்பாதபோற்றி
யருட்பிரகாசபோற்றியருட்பிரகாசபோற்றி. (௰)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

போற்றிஸங்கீர்த்தனம்.

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

## முறையீட்டுவிண்ணப்பம்.

விடையத்தழுத்திருய்யும்படிக்குவீடுங்காட்டில்லீர்
அடையவென்னையவலப்படுத்தலழகோவருட்கையா
கடல்சூழ்வையம்பரவப்படுவீர்கண்ணேகளேகண்ணே
வடலூரொடுமென்னெஞ்சுங்கொண்டீர்வாழ்ந்துபோதிரே. (க)

அறவும்விடுக்கிருறநல்லருளுட்புகுதலதுவொட்டீ
ரறமுன்சொன்னீரென்னையவலப்படுத்தலழகேயோ
கறவைபுனிற்றேறுடலவும்வடலூர்கண்ணேகளைகண்ணே
மறமன்னியவென்னெஞ்சுங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே. (௨)

உமக்காட்படுத்தீரிடையேகள்ளவினையுற்றுளவே
யமைவுற்றிருந்தீரென்னையவலப்படுத்தலழகேயோ
கமச்சூன்முகில்சேர்பொழில்சூழ்வடலூர்கண்ணேகளைகண்ணே
மமதையுறுமென்னெஞ்சங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே. (௩)

கெடவேயுலகநடையிற்செலுத்தீர்கேடில்பதந்தாரீர்
அடைபேரருளீரென்னையவலப்படுத்தலழகேயோ
கடனஞ்சுண்டீர்வானோருய்யக்கண்ணேகளைகண்ணே
வடலூங்கொடியேனெஞ்சுங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே. (௪)

நினையாதிருக்கவொட்டீர்நீராயுருக்கியுயக்கொள்ளீ
ரனைமேவியநீரின்னமவலப்படுத்தலழகேயோ
கனைவானுரிஞ்சும்பொழில்சூழ்வடலூர்கண்ணேகளைகண்ணே
வனையாநெஞ்சமிடங்கொண்டிருந்தீர்வாழ்ந்துபோதீரே. (௫)

தாழ்வேபடுத்தித்தாழ்ந்தாற்பொறுக்காதெடுத்தீரெடுத்தாங்கே
யாள்வானிசையீரின்னமவலப்படுத்தலழகேயோ
காழ்மாமரஞ்சூழ்வடலூரிருந்தகண்ணேகளைகண்ணே
வாழ்வானருளீர்வாளாங்கிருந்தீர்வாழ்ந்துபோதீரே. (௬)

வீணேயடிமையெனப்பேர்பட்டேன்மெய்ம்மைநெறிகாணேன்
ஆணாய்ப்பிறந்திவ்வவலமுழந்தேனழகோவருட்கையா
காணீர்போலுமென்னேய்வடலூர்கண்ணேகளைகண்ணே
மாணாவென்னெஞ்சிடங்கொண்டிருந்தீர்வாழ்ந்துபோதீரே. (௭)

கெட்டாலவமேநானேநீரேபழிபட்டீராளப்
பட்டேயொழிந்தேனின்னமவலப்படவேபடுமேயோ
கட்டார்புனல்சூழ்வேலிவடலூர்க்கண்ணேகளைகண்ணே
மட்டாகரவென்னெஞ்சங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே. (௮)

பிறர்தந்திரமொன்றெண்ணேன்பிறிதுமதியேன்பொருளாக
அறமன்னியசேவடியல்லானானவலப்படுவேனோ
கறுவில்கருணைக்கடலேபுலியூர்க்கண்ணேகளைகண்ணே
மறுவில்வடலுமென்னெஞ்சுங்கொண்டீர்வாழ்ந்துபோதீரே. (௯)

மறந்தான்மறக்கப்படுமோவுமைமநான்வடலூர்வாழ்ந்துள்ளீர்
அறந்தானுரைத்தீராலதிழலிலைவலங்களாயீரோ
கறந்தான்கன்றேடுலவுமொற்றிக்கண்ணேகளேகண்ணே
மறந்தாழ்நெஞ்சில்வாளாங்கிருந்தால்வாழ்ந்துபோதீரே. (ய)

எதுநான்செய்கேன்யாரேகளேகண்ணெணேமுன்னூட்கொண்டீர்
புதுமாமுகப்பேலுயுமாறுளதோவவலம்புகுவேனே
கதுவாதென்னுள்ளமர்ந்தீர்தணிகைக்கண்ணேகளேகண்ணே
மதுவார்பொழில்சூழ்வடலூரிருந்தீர்வாழ்ந்துபோதீரே. (யக)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார் முறையிட்டுவிண்ணப்பம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

# குறையிரந்தவிண்ணப்பம்.

அப்பாவாரமுதேயழகாவணியம்பலத்துள்
செப்பார்கொங்கையொடுநடமாடியசேவகனே
மைப்பாவியகண்டத்தாய்வடலூருறைமாமருந்தே
யிப்பார்தன்னிடையேயெனையென்செயவெண்ணினையே. (க)

அன்னேயாருயிரேயணியம்பலத்தாரழகா
கொன்னேநாள்கழித்தேன்கொடுங்கூற்றுயிர்கொள்ளை கொள்ள
மன்னேமாதவமேவடலூருறைமாமருந்தே
யென்னேதிருவுளந்தானெனையென்செயவெண்ணினையே. (உ)

அணியேயாரழகாவருளம்பலத்தென்னரசே
பிணியேன்நினையமாட்டேன்வுனபெய்கழல்பேய்மதியால்
மணியேமாநிதியேவடலூருறைமாமருந்தே
எணியேனைநதல்செய்வேனெனையென்செயவெண்ணினையே. (௩)

அய்யாவாரழகாவடியார்தம்மனத்தவனே
பொய்யானபலவும்புரிந்தேயவம்போக்குகின்றேன்
மையார்கண்ணிபங்காவடலூருறைமாமருந்தே
யைய்யாவாறுரையாயெனையென்செயவெண்ணினையே. (௪)

ஆனிடத்தஞ்சுமாடுமணியம்பலத்தாரமுதா
வூனிடத்தாசைவைத்தேன்வுனையோதல்நினைத்தல்செய்யேன்
மானிடக்கோலங்கொண்டாய்வடலூருறைமாமருந்தே
ஏனிடர்ப்பாடுவைத்தாயெனையென்செயவெண்ணினையே. (௫)

அஞ்சலென்றாண்டவனேயம்பலந்திகழ்செம்பொற்குன்றே
பஞ்சடிப்பாவைநல்லாளுடனாடியபண்டங்கனே
மஞ்சணிபொன்மிடற்றாய்வடலூருறைமாமருந்தே
எஞ்சலிலாதவனேயெனையென்செயவெண்ணினையே. (௬)

அன்றயன்மாலறியாவடியேன்றலைக்கேமுடியா
நன்றணிந்திட்டவனேபொதுவாடியநம்பரனே
வன்றுயர்நீக்கவல்லாய்வடலூருறைமாமருந்தே
என்றனியாருயிரேயெனையென்செயவெண்ணினையே. (௭)

அரியவனேயரசேயணியம்பலத்தாரமுதே
தெரிகிலன்னின்னையின்னஞ்செறியுநெறிதேவதேவே
வரியரவார்த்தவனேவடலூருறைமாமருந்தே
இருவினைவல்லிபூண்டவெனையென்செயவெண்ணினையே. (௮)

அரனேயம்பலவாவழலாடியவாரமுதே
மரனேர்வன்கணன்கன்மனமோவுருகாவலிது
வரனேர்மங்கைபங்காவடலூருறைமாமருந்தே
இரவேன்வுன்னையெந்தாயெனையென்செயவெண்ணினையே. (௯)

அற்றவர்க்கற்றவனேயழகம்பலத்தாடல்செய்வாய்
குற்றமெலாம்படிகொள்கொடியேனிற்குறித்துக்கொள்ளேன்
மற்றுங்கெடவிருந்தேன்வடலூருறைமாமருந்தே
எற்றினிவிண்ணப்பிப்பேனெனையென்செயவெண்ணினையே. (௰)

ஆதனையாளுடையாயம்பலந்திகழாரமுதே
வோதலினியவனேயொற்றியூருறைவுத்தமனே
மாதிடங்கொண்டபிரான்வடலூருறைமாமருந்தே
யேதினிச்செய்யவல்லேனெனையென்செயவெண்ணினையே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

குறையிரந்தவிண்ணப்பம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

# அற்பித்தவிண்ணப்பம்.

தண்ணார்கொன்றையினாய்தமிழ்மெய்ப்பயனானவனே
அண்ணாவாருயிரேயணிமன்றவவாரழல்போல்
வண்ணாவானமுதேவடலூருறைமாணிக்கமே
எண்ணாயேழைகுற்றமெம்பிரானென்னையேன்றுகொள்ளே (க)

சேலாடும்விழியாளவள்செய்தவங்காணவன்று
நூலார்மார்பினனாய்நுணுகும்நடைகொண்டவனே
மாலோடயனறியாவடலூருறைமாணிக்கமே
ஏலாயேழைகுற்றமெம்பிரானென்னை யேன்றுகொள்ளே. (உ)

கந்தாகற்பகமேகடையேனிருகண்மணியே
நந்தாமணிவிளக்கேநாயினேனைப்பொருட்படுத்து
வந்தாய்மானிடனாய்வடலூருறைமாணிக்கமே
யெந்தாய்குற்றமெண்ணேலெம்பிரானென்னையேன்றுகொள்ளே.

தாயேதத்துவனேதந்தையேயெந்தயாநிதியே
சேயேசெழுஞ்சுணையேசிவனேசிவலோகத்தனே
மாயாமாயம்வல்லாய்வடலூருறைமாணிக்கமே
யேயேவேழைகுற்றமெம்பிரானென்னையேன்றுகொள்ளே. (௩)

குருவேகோமளமார்கொடியேரிடைக்கொம்பனையாள்
திருவேதெள்ளமிழ்தேசிறியேனுளச்செய்யமலர்
மருவேமன்றுடையாய்வடலூருறைமாணிக்கமே
யிருவேறெண்ணலெந்தாயெம்பிரானென்னையேன்றுகொள்ளே.

கொடியேனெஞ்சகமேகோயில்கொண்டகுருமணியே
படிமேலொன்றுமிலாப்பாவியேனைப்பொருட்படுத்து
வடிவோர்மானிடனாய்வடலூருறைமாணிக்கமே
அடிகேள்குற்றமெண்ணேலம்மானென்னையேன்றுகொள்ளே.

ஊழ்மாமுனையமுதமுண்டவெம்முடையுத்தமனே
பாழ்மாமைமனூருவகையிற்பரிந்தாண்டுகொண்ட
வாழ்வேமாமணியேவடலூருறைமாணிக்கமே
ஏழாயென்னவெள்ளேலெம்பிரானென்னையேன்றுகொள்ளே.

ஊனாயுயிரானாயொளிர்ஞாயிறுதண்மதியம்
வானாய்தீநிலனீர்வளியானமரகதமே
மானார்கண்ணிபங்காவடலூருறைமாணிக்கமே
ஆனாவாரமுதேயடியேனையுமேன்றுகொள்ளே. (அ)

ஆலநறுநிழலும்மணிதண்குருந்தின்னிழலும்
போலவென்புன்றலைமேற்புனைவித்தபொலங்கழலாய்
மாலவோர்மாணிடனாம்வடலூருறைமாணிக்கமே
யேலக்குழலிபங்காவெம்பிரானென்னையேன்றுகொள்ளே. (௯)

போதேபோக்குகின்றேனவமேவெறும்புன்மைகளால்
யேதேசெயக்கடவேனினியேதுவிலேனாயுமா
வாதேதுள்ளுளவென்வடலூருறைமாணிக்கமே
யீதோகருணையெந்தாயெம்பிரானென்னையேன்றுகொள்ளே. (௰)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

அற்பித்தவிண்ணப்பம்

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்

# திருக்கழற்சந்நிதிவிண்ணப்பம்.

கொடிக்குக்காய்கனங்கொலெனுங்கோலவருண்மொழியுங்
குணம்பெறவீங்கிவன்பாலிரக்கம்வரவிலையெம்
மிடிக்கொருமாமருந்தாம்பொன்னம்பலத்தினருளால்
விளங்குநடங்காணாதவேற்றுமையானென்றங்
கடுத்தருளிச்செய்தவருளப்பாடுமாங்கே
யமலவருட்கரத்தாலேகைபிடித்தவாறுந்
தடித்தமனச்சிற்றேழையறிகிலேனரசே
தவிக்கவிட்டேலென்றுகொலாய்சற்குருமாமணியே. (க)

ஆண்டநாளஞ்சலென்றவருட்டிறமுமாங்கே
யருண்மொழியேயொருமொழியின்றெனக்கருளுதிறனும்
பாங்குறப்பினுங்காங்குபருவரல்களுறுங்காற்
பரிந்தவருளுளப்பாடும்பாவியனேயிங்கு
வீம்பறவென்மடப்பிள்ளாயவைதரித்தாயென்ன
விளம்பியதுங்காலனுனையணுகலில்லையென்ன
வேரம்படுத்துச்சொன்னதொருமொழியு
முண்மையுணர்கில்லேனுடையானேகடையேனுக்கிரங்கே.

அன்றொருபுன்கனவினிடையருளாலேவந்தென்
னாதரவுநோக்காவாங்குருவரையென்னுரைக்கு
நன்றுபொருண்மொழிந்தனைநாடாமேமறந்த
நவைநோக்காதுடையானேநனவினுநன்கருளி
வென்றிபெறக்கருணைசெய்யும்வேதியனேதுரையே
வியனுமருட்பிரகாசமேதக்கமணியே
நின்றுலகமொருமூன்றுமேத்துமணிமன்ற
நின்றவனேகுன்றவில்லிநீள்கருணைக்கடலே. (௫)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசர் திருக்கழற்சந்நிதிவிண்ணப்பம்
முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசர்

## மங்களவாழ்த்து.

புளினமாமாதுபங்கினன்பொருவில்சூராடுகண்டகன்
புதல்வனேயாகவந்துறும்புனிதபாலாயாமங்களம்
கனிசெய்காமாதியந்தகன்கழியபாதாரவிந்தமுன்
கருணையானேநிமிர்ந்திடுங்கனகவாகாயமங்களம்
விளிவிலாலாலசுந்தரன்விரைவினுசாரமுன்றரும்
விடமுமேமனுள்விருந்ததின்மிசைகிரீவாயமங்களம்
நளினமீதேயியந்தவனளினமாதாவியுந்தொழு
நலபதாராயலிங்கவென்னடநபாதாயமங்களம். (௧)

தகவிலாதேனையுங்கொளுந்தருணமீதாகவந்துதன்
சரணவாரிசமுந்தருந்தயவிணுய்ராமலிங்கவென்
றுகலிலோர்நாமமும்புனைந்துவமைமயாதேனுமின்றியுங்
கொருவனுபாசநெஞ்சகமொருவிலாயோகமிங்குறுஞ்
சுகசொரூபாயமங்களஞ்சுருதியாதாரமங்களந்
துதிசெய்வார்பாலமங்களஞ்சொலவொண்ணுசோதிமங்களம்
நகமிணுதாயமங்களம்நடவிணேதாயமங்களம்
நடநராசாயமங்களம்நடநபாதாயமங்களம். (உ

பரமபோதாயமங்களம்பவதிலோலாயமங்களம்
பவளரூபாயமங்களம்பசுவினேருயமங்களம்
சரபகோலாயமங்களம்சகலமாலாயதன்பனுஞ்
சரசசீலாயமங்களஞ்சகுணசீலாயமங்களம்
வரப்ரதாபாயமங்களம்மதில்கள்கோபாயமங்களம்
மயலுலோபாயமங்களம் மகவிலாபாயமங்களம்
நரனெனுராமலிங்கனென்றொருபொனுநாமவங்கித
ரணியெனுளாவுவந்திடுநடநபாதாயமங்களம். (௩

சகமிலாசாயவம்பரமதனிலாசாயலென்றிடுந்
தனிவிலாசாயமங்களம்சபையுலாசாயமங்களம்
சுகசுரேசாயமங்களம்துயர்விதேசாயமங்களம்
சுகுணவாசாயமங்களம்துரியதேசாயமங்களம்
மகவிணுசாயமங்களம்மதுரவாசாரமங்கலே
மகிணநேசாயமங்களம்மதிளிணுசாயசிந்திடும்
நகவிணுணுமுகஞ்சரமரியுமோர்சார்பதென்றிடு
நடலேயாய்ராமலிங்கவென்னடநபாதாயமங்களம். (௪

சகலவேதாகமங்களுந்தலைமைநாடாவணங்கிடும்
சமரசாசாரவிங்கிதந்தழுவுமேலாயசங்கின்
றகிலகோணுமையுய்ந்திடவருளுவாணுகமொன்றணிந்
தமலமாநாடகஞ்செயுமமுதகோலாயமங்களம்
இகலருதாமதங்களென்பவைவெலாமோர்வியப்புவி
யினியசீபாதபங்கயமிவையுசாவாமைமயொன்றுற

நகலிலாவாழ்வுவந்தருணகமிணுதாயமங்களம்
நடநராசாயமங்களம்நடநராசாயமங்களம். (ரு)

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பிரகாசனார்
மங்களவாழ்த்து முற்றிற்று.

---

## வாழ்த்துத்திருவிருத்தம்.

திருவிருந்திடு தெய்வத் தாமரைச் செய்ய
உருவிருந்திடும் பதமல ருவப்பினென் றலைக்கே
பெருவிருந்திடு மருட்பிரகாசனார் பெருஞ்சீர்
வருவிருந்திடும் வாயதே வாழிநீடூழி.

திருச்சிற்றம்பலம்.

வாழ்த்துத் திருவிருத்தம்
முற்றிற்று.

---

## திருவருட்பிரகாசனார்
# அலங்காரம்.

காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஒளிசெய்தல்லைக்காய்மதிப்பிஞ்சுசீரலருரகமொட்டுறத்தில்லை
வெளிசெயும்பொதுமன்றிடையருட்பெரும்விழுக்கனிகனிவேத
வளிசெயாநந்தத்தேன்சொரிகற்பகத்தருகிற்பைங்கொடிபூத்த
களிசெய்யோதகத்திருமலர்த்துணையுளமாலைகட்டுறுகின்றே.

---

## நூல்.

---

கட்டளைக்கலிப்பா.

கையின்மூக்கனவொன்றிலாமாலையாக்
காமராசனளவில்வடமூர்ந்து
பையவந்தான்மலர்க்கையரயெங்குடில்
பரிந்தகையுமின்னேரைசகைகையாய்ச்
செய்யபாயல்பொருந்துகையின்றிப்பால்
சேர்த்தகஞ்சிமண்ணோடுகள்ளார்கையா
லுய்கையின்றியயற்கைகைகைகைகை
யுறுமருட்பிரகாசவுய்ம்மாறென்னே. (க)

கைதவம்பிதுவன்றுகண்ணூராநீ
　　கண்டுயிர்கைதவன்மருகாகவே
வைகையந்துறைவாழ்விக்தநின்னுலா
　　வசத்தளாகவோர்மாத்திரைசேர்காலாற்
பையல்வேளுமறக்கைகொண்டானங்தோ
　　பார்க்கையின்றிமறக்கைகொண்டாளெம்பா
லையசெங்கையருட்பிரகாசனே
　　யருள்வதோகையென்றுகையென்றோகையே. (௨)

கைக்கணிள்குழல்வெம்முலைக்காந்துளே
　　காலத்தோன்றுமலைமலைநங்கைதன்
பொய்க்கணீணடுப்பூணுக்கோர்பாத்திரைப்
　　போக்கிக்கொண்டனைதநின்பாதியாளாக.
வைக்கைகண்டுமதப்பயல்பூக்கையால்
　　வாரிக்கொண்டிருகையுமறைக்கையால்
விக்கையோகுகைமேற்குகைமேற்குகை
　　விளம்புமாறென்னருட்பிரகாசனே. (௩)

கைச்சிருந்துந்தித்திச்சகனதனக்
　　காவின்பின்மிகையிற்கைகழீஇயிட்டாள்
பெச்சுநின்கவிவாழப்புவியினே
　　வித்திட்டுச்சகநிற்றுயலிற்பின்கண்
டிச்சையான்முன்னெழுத்துநாலுக்குஞ்சேர்த்
　　திங்குநின்றதகையுள்ளங்கொள்கைகை
வைச்சிலாயெனில்வாகைவேள்கைக்குக்கை
　　வாட்கையாகுமருட்பிரகாசனே. (௪)

கையிழந்தவம்மாரனூர்காகளக்
　　கைத்தாயின்னிடைப்பெண்சுரரூண்பெயர்ச்
செய்யபந்தர்வாயங்நொடியின்கடை
　　தீர்ந்தகொண்டாடுநேரத்திற்செங்கைமான்
பையவேமறைத்திட்டநின்கோலங்கை
　　பலிக்கையும்மம்மொழிக்கையைநீத்ததா
யையறிவைக்கைதந்தனள்காண்கை
　　யென்றருட்பிரகாசகையாதகையாளனே. (௫)

கையிற்சோற்றுக்கோர்கலம்வைத்துக்கொண்டறங்
கௌரிசெய்யவிருநாழிநென்முனம்
பையத்தந்தாய்பரிந்தவர்மெய்யெலாம்
ப்பார்க்கவேவெளியாக்கினையீதலால்
ஏய்யவந்தெதிர்வேடனைப்போக்கினை
யேத்தும்பார்த்தன்முன்வேடனுனையென்றால்
ஐயவென்பெண்ணறிந்திலள்போலுமீ
தருட்பிரகாசபேராசைகொண்டிட்டதே. (௬)

விடலிலோர்கலத்துக்குறைகொண்டண்ட
மேவுமச்சராசரமளிக்கவைத்தீர்
கடலுந்தூணிபதக்காசைவைத்தார்
காற்காணிமேலொருகாசுபெற்றார்கள்யார்
படலையிட்டீர்மதலைவயிற்றைறவிண்
பரிவின்முன்வளர்த்துக்குறைத்துள்வைத்தீர்
வடலுள்வாழ்வீர்திருவொற்றிமாணிக்க
வள்ளலாவீர்க்கிதுவுமோர்மாண்பதே (௭)

சைவரானீர்சமணென்மையாக்குத
றகுதியோகண்டார்தாஞ்சிரியாவகை
பொய்வராதநூல்வந்தளித்தால்காமப்
போக்கனின்றுபுகுமோநங்கூட்டத்துள்
உய்வராவோமுமக்கோர்குறைவிலை
யுடையரேமுற்றும்வெற்றரையானீர்போல்
செய்வரானுகளும்வடலூரில்வாழ்
செல்வரேதிருச்சிற்றம்பலவரே. (௮)

உலகுணரவெழுவாயாய்ப்பேர்வெண்ணீ
றுற்றமேனியிரண்டனுருபின்மூன்
றிலகுமொன்றின்கீழ்நின்றென்றுகையிசைத்
திரண்டைமற்றென்றற்கிட்டோர்ந்தைதந்தைச்
சொலின்மெய்ப்பாதியினுக்கியாறின்பொருட்
டுய்யராயேழ்நூதலுற்றுமெட்டினைக்
கலகமாரப்பயல்செயவிட்டதென்
கழறுமல்வழியில்வடலூரே (௯)

மெய்வராதொருபோதுநும்பானேயம்
மேவினர்க்கென்பதென்னுமக்கோர்பெயர்
பொய்வராதசிந்தையவர்பூட்டினர்
புகறலையாஞ்சலவரென்றேயாஞல்
கைவராவிவ்வடுக்கண்ணிநும்முறைக்
கருத்தறியாள்விருதுவிண்கட்டினன்
தெய்வராயரேசீரொற்றிவாழ்வடற்
றியாகராயரேதிருவுளஞ்செய்யுமே. (௧௦)

இருவரியாரொருவரிபோல்வீசி
யுரப்பினஞெிரவார்வருவார்பிச்சைத்
தருவரேற்றடுப்பாரிங்கோருவரியார்
தாராரைத்தாரீரேற்றரும்மாயமும்
வருவரியாருங்குறுகுங்குவளைகை
வைத்துச்சூடுவர்நீள்போலியாந்தரு
பெருகநீர்மழைபெய்யும்வடலுறை
பெரியரேயொற்றிநின்றபிரானிரே. (௧௧)

மகரமாடக்கொடியவன்மெய்யுரு
வன்கண்டீச்சுட்டும்வாங்குமெய்கோல்பெறத்
தகரவெண்ணிற்குளிர்சிரம்வாடாமே
தந்தையார்தமயன்றமிழ்மாமுனி
சிகரத்துண்ணிலைமாற்றுநீர்பாய்ச்சவத்
தீயனென்பேற்பொரவுகரப்பற்று
தகரங்கூட்டியகரங்கொண்டான்போலு
மருளுவீருய்வருட்பிரகாசரே (௧௨)

வானச்சந்திரனின்னடிப்பட்டவவ்
வஞ்சந்திரமகிச்சந்திரன்பெடை
தானச்சந்திரநாவனறுங்கனி
தகவினூட்டிமகிழ்போதென்னேசுட்டான்
மானச்சந்திரதிக்குத்தாலிதந்தீர்
மற்றுமக்கில்லைபோலுமெம்பாவைபால்
ஞானச்சந்திரவிற்கேட்கவென்சொல்கோ
நவிலுமொற்றியருட்பிரகாசரே (௧௩)

ஒற்றைக்கண்கூடினர்களிகொள்ளப்போ
　　யொருபுறத்துறவெண்பெண்போல்வாரைவெல்
வெற்றிக்கண்மடமாதர்விழிக்குப
　　மானங்கண்டுகளிகொளுநேற்றிரா
மற்றைக்கண்ணுறுமைதுடைக்கச்சென்றேம்
　　வருந்தினுளறத்தோடுநின்றுடுக்கத்
துற்றமாத்திரைநீக்குகின்றுள்வட
　　னுத்தமரேயுமக்குமீதொக்குமே. (௧௪)

கருப்புக்கேதுயராகவிசைவிலார்
　　கருத்துக்கேயிசைவாகவுளார்வடல்
இருப்புக்கேதுணிவாய்ச்சென்றுசொல்லடி
　　யென்னபாவமீதெம்பாவைகாற்சந்த
நெருப்புக்கேதுணைமாரனர்தேவருண்
　　ணீளுண்டிக்குக்குறுகுமவராக
விருப்புக்கேதுவறிகிலோந்தந்தைதன்
　　விழுக்குணம்மகற்கில்லாததென்னென்றே. (௧௫)

குளங்கொளாடேர்கண்ணுற்சுட்டசித்தசக்
　　கோலமைந்தனுங்கோதானஞ்செய்திட்டான்
றுளங்கொளாயிழையும்வடக்காகக்கா
　　றன்னுமேயெதிர்வந்தினியாயினு
முளங்கொளாய்தொடையிற்சேர்மதலையை
　　யுவந்தனுப்பும்வருவதுண்டேலின்றேல்
வளங்கொளாரூரினம்பியையாயினு
　　மற்றனுப்பிவரச்செய்துகொள்ளுமே. (௧௬)

சொலைவிடுத்தாண்மதச்சோப்பலேறிநீள்
　　சொலையடுத்தானுடல்வளைவாகவேள்
கலையொறுத்தாடணம்பெருத்திட்டுவெண்
　　கலைபிடித்தானிரவலனும்மக
ணிலையொழித்தாள்புலனைந்துசோரவன்
　　னிலைதொடுத்தான்றனிப்புலன்மைகதர
மலையெடுக்கவில்லாக்கிவடலொற்றி
　　மலையிருக்கவில்லாக்கியவள்ளலே. (௧௭)

